மலர் 15 இதழ் 26

# கல்கி

மன்மத ௵ தை 16

29, ஜனவரி 1956.

## பொருளடக்கம்

1. 500 காலன்கள் டாங்க் ட்ரெயிலர்
2. டிராக்டர் ட்ரெயிலர்
3. ஸாக் டிரக்
4. தண்ணீர் கைவண்டி
5. (Pan Type) வீல் பாரோ

மேலே குறிப்பிடப்பட்டவை எங்களுடைய சிறந்த இலேசான என்ஜினியரிங் தயாரிப்புகளில் சில. எங்கள் தயாரிப்புகளில் ஒவ்வொன்றும் முதல்தரமான சேவை யுடையதாயும் வாங்குபவர்களிடையே முதல் இடத்தை விசேஷமாகப் பெற்றும் விளங்குகிறது.




ஸிம்ஸன் & கோ லிட்.
மதராஸ்-2

கிளைகள் : பெங்களூர். • திருச்சி. • உதகை • ஹைதராபாத்



மலர் 15
இதழ் 26

தமிழ்த்திரு நாடு தன்னைப் - பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — *பாரதியார்*

மன்மத ௵
தை மீ 16

# பம்பாய் நிலைமை

பாரதப் பிரதமர் நேரு அவர்களும் பாரத அரசாங்கமும் புகழின் உச்சியை அடைந்த சமயத்தில் உள்நாட்டு நிர்வாகத்தில் ஒரு சோதனை ஏற்பட்டு விட்டது. சுதந்திரம் அடைந்த உடனே காஷ்மீரில் பாகிஸ்தானுடைய அக்கிரமப் பிரவேசத்தினால் எதிர்பாராத ஒரு பெருஞ் சோதனை நேர்ந்தது. பல கஷ்டங்களுக்கு இடையில் அதை வெற்றியுடன் பாரத சர்க்கார் சமாளித்தார்கள். அதனாலேயே நாட்டின் சுதந்திரம் வயிரம் பெற்றது. இந்தியாவுக்குச் சுதந்திரமா, அதை எப்படி இவர்கள் காப்பார்கள் என்று பலர் ஐயமுற்றபொழுது, உறைபனிப் பிரதேசத்தில் நம்முடைய ராணுவம் வீரத்துடன் செய்ய வேண்டியதைச் செய்து, மானத்தையும் தேசத்தையும் காத்தார்கள். அந்தக் காலத்தில் ஏற்பட்ட சோதனையைப் போலவே இப்போது எதிர்பாராத ஒரு பெரிய சோதனை நம்முடைய தலைவர்களுக்கு ஏற்பட்டிருக்கிறது. அந்தச் சோதனைக்கும் இந்தச் சோதனைக்கும் பெரும் வித்தியாசம் இருக்கிறது. இப்போது நடக்கும் அராஜகத்தில் நாமே நமக்குப் பகைவர்கள் ஆகி நிற்கிறோம். அன்னியர் தொடர்ந்த போரில் வெற்றியும் தோல்வியும் சந்தர்ப்பத்தைப் பொறுத்தது. தோல்வியில் அவமானம் கிடையாது. ஆனால், நமக்கு நாமே பகை செய்யும்பொழுது, அந்தச் சங்கடம் நல்ல முறையில் நிவர்த்தியாகாமற் போனால், தோல்வி தேசத்தின் சர்வ நாசமே யாகும். ஆனபடியால், காஷ்மீரில் வந்த சோதனையைக் காட்டிலும் இந்த எஸ். ஆர். ஸி. புதிய ஏற்பாட்டிலிருந்து கிளம்பியுள்ள சோதனை மிகப் பெருஞ் சோதனை.

ஆண்டவனுடைய அருள் இருப்பின் இப்போது வந்திருக்கும் சங்கடமும் சோதனையும் கனவாக முடியும். அனைவரும் அதற்காகப் பிரார்த்திப்போம். ஈசனுடைய ஆயிரம் நாமங்களில் "கெட்ட கனவுகளை அழிப்பவன்" என்பதும் ஒரு பெயர். அதன் உண்மைப் பொருளைப் பம்பாய்ச் சம்பவங்களிலிருந்து இப்பொழுது நன்றாக உணரலாம். துன்பக் கனவுகளை அழிக்கும் சர்வேசுவரன் நம்முடைய பிரதமர் நேரு அவர்களுக்கு அருள்வாராக!

யுத்தங்களிலும் சரி, அரசியல் நிர்வாகங்களிலும் சரி, இடையூறு நேர்ந்தபோது வியூக அணிவகுப்புக் கலையாமல் பின் வாங்குவது பெருங் கஷ்டம். அதிலேதான் வீரன் தன் தீரத்தையும் சாமர்த்தியத்தையும் காட்டுவான்.

சுதந்திரம் அடைந்த மக்களுக்குள் சுதந்திர உணர்ச்சியின் ஆவேசம் அதிகம். நாம் நியமித்தவர்கள்தானே நம்மை ஆண்டு வருகிறார்கள் என்கிற நினைவு அடிக்கடி மறைந்துபோகும். இதை மனத்தில் வைத்து இயற்கையில் கிளம்பும் கோபத்தை ஆற்றிக்கொள்ள வேண்டும். வெற்றி தோல்வி என்கிற பிரமையை அகற்றிக் கொண்டு நாட்டின் கௌரவம் எது என்பதைத் தெளிந்த முறையில் ஆராய்ந்து முடிவு செய்வதில், தயங்க வேண்டியதில்லை. இதுவேதான் ஒரு அன்னிய ஆட்சிக்கும் சுய ஆட்சிக்கும் உள்ள பேதம். "சுட்டேன் சுட்டேன்" என்று டையர் சொன்ன மாதிரி நாம் சொல்லமுடியுமா? அராஜகம் வெகுநாள் நடைபெறாது. சாந்தி ஏற்படும்!

வெளி நோக்குக்குச் சாந்தி ஏற்பட்டாலும் சாம்பல் பூத்த நெருப்புப்போல துவேஷமும் சினமும் மக்கள் உணர்ச்சியில் வேலை செய்துகொண்டே யிருக்கும். அதை நினைவில் வைத்து அரசாங்கம் நடைபெற வேண்டும்.

இந்தச் சமயத்தில் எந்தப் பிரிவினையும் வேண்டாம்; அனைத்தையும் நிறுத்தி விட்டு, இருந்தபடியே இருக்கலாம் என்று சொல்லிவிடுவதில் எந்தவிதமான கௌரவக் குறைவும் உண்டாகாது. இது நாட்டில் பெரும்பாலோருடைய அபிப்பிராயம் என்பதில்

நமக்குக் கொஞ்சமும் சந்தேகமில்லை. மக்களின் போக்கு பிடிவாதமேயாயினும் அது மக்களின் போக்கு, நம்மைத் தாக்கும் ஒரு பகைவனின் போக்கு அல்ல. மக்களைச் சாவதான நிலைக்குக் கொண்டு வருவது மக்கள் பிரதிநிதிகளின் கடமையாகும்.

தற்போது ஆராயப்படும் பிரிவினை ஆலோசனைகள் வெறும் பிரேரணைகளே. தீர்மானங்கள் அல்ல. இதற்குள் இவ்வளவு கோபமும் தாபமும் ஏன் உண்டாக்கிக் கொள்ள வேண்டும் என்பதை அனைவரும் ஆலோசிக்க வேண்டும். அரசியல் நிர்ணயச் சட்டத்தை மாற்றித்தானே நாடுகளைப் பிரிக்க முடியும்! அரசியல் நிர்ணயச் சட்டத்தை மாற்றுவதற்குப் பல கடுமையான நிபந்தனைகள் இருக்கின்றன அல்லவா! அதுவெல்லாம் முடிந்த பிறகுதானே, பிரிவினைகள் சட்டமாகும். அதற்குமுன் பிரேரணைகளை நிறுத்துவதற்கும் மாற்றுவதற்கும் அரசாங்கத்துக்கு உரிமையும் உண்டு. அவசியமானால் கடமையும் உண்டு.

தேச நிலை சரியாக இல்லாதிருந்த போதிலும், மிக நெருக்கடியான சந்தர்ப்பங்களில் நிர்வாகப் பொறுப்பை எடுத்துக் கொள்ள வேண்டிய அவசியம் ஒரு சிலரின் தவிர்க்க முடியாத பொறுப்பாகச் சில சமயம் ஏற்பட்டு விடுகிறது. முன் பம்பாய் பிரதமராக இருந்த ஸ்ரீ கேர் அவர்களுக்கு இந்தக் கடமை இப்போது ஏற்பட்டு விட்டதாக நம்முடைய அபிப்பிராயம். அவர்தான் தற்போது பழைய பம்பாய் ராஜ்யத்தைப் பழைய கௌரவத்துடன் மீட்டுக் கொடுக்க முடியும். வேறு வழியில்லை.

# விஷமும் அமுதமும்

கடலைக் கடைந்தபோது எரியும் விஷம் முதலில் கிளம்பிற்று. பிறகு அமுதம் எழுந்தது. இந்தப் புராண நிகழ்ச்சியை மறுபடியும் நம் கண்ணால் கண்டமாதிரி, பம்பாயில் கிளம்பிய விஷம் தீர்ந்துபோய், இப்போது வங்காளம் பிஹார் இரு ராஜ்யங்களும் ஒன்று சேர்ந்து, ஒரு பெரிய ராஜ்யமாவதற்கு அடிகோலி விட்டன. வங்காளம் பாரத நாடு முழுதுக்குமே வழிகாட்டிவிட்டது. இந்திய முன்னேற்றமும் மானமும் செல்வாக்கும் நிச்சயமாகி விட்டன.

சென்னை, திருவாங்கூர், மைசூர் முதன் மந்திரிகளும் வெகு சீக்கிரத்தில் கூடித் தக்ஷிண ராஜ்யம் அமைத்து, பாரத நிர்வாகத்தில் தென்னாட்டு மக்களுக்குச் செல்வாக்கும் மதிப்பும் ஏற்படுத்துவார்கள் என்று எதிர் பார்க்கிறோம். மொழி அபிவிருத்தியைப் பற்றி எவ்விதமான சந்தேகமும் வேண்டியதில்லை. அது ஒரு இடையூறுமின்றி நடைபெறும். யாராலும் தடுத்து நிறுத்த முடியாது.

இந்தியாவின் ஒற்றுமையைப் போல் இந்திய நாட்டினுக்குள் தென்னாட்டின் ஒற்றுமையை வளர்க்க வேண்டும். மொழி பேதங்கள் இதற்கு இடையூறு ஆகாது. வங்கதேசத்தாரும் பிஹார் தேசத்தாரும் வெவ்வேறு மொழிகள்தான் பேசுகிறார்கள். மொழிப் பற்று இருவருக்குமே தீவிரம். ஆயினும் ஒன்று சேர்ந்து விட்டார்கள். திராவிட பாஷைகளான தமிழ், கன்னடம், மலையாளம், ஆகிய மிக நெருங்கிய தொடர்பு கொண்ட மூன்று மொழிகள் ஒன்று சேர்ந்து தென்னாட்டின் பண்பாட்டைக் காப்பாற்றுவது எளிதாகும். கடமையும் ஆகும். பயம் வேண்டியதே இல்லை. பரஸ்பர உதவிக்கு நிறைய இடமிருக்கிறது. அவசியமும் இருக்கிறது.

# காந்தி மண்டபத் திறப்பு விழா

மானிலத்து மக்களிலே உத்தமரான மகாத்மாவை நாம் மறக்கவில்லை.

தமக்கென வாழாமல் பிறருக்காகவே வாழ்ந்திருந்த தியாக மூர்த்தியை நாம் மறக்கவில்லை.

பல நூறு ஆண்டுகளாக அடிமைப் பட்டுக் கிடந்த பாரதத்துக்கு விடுதலை வாங்கித்தந்த வீர புருஷரை நாம் மறக்கவில்லை.

பன்னெடுங்காலமாகத் தீண்டாதார் என்று ஒதுக்கி வைத்திருந்த மக்களுக்கு இந்து சமூகத்தில் சம உரிமை அளித்துப் போற்றிய மகானை நாம் மறக்கவில்லை.

பாரத புண்ணிய பூமியில் ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக வாழ்வதற்குச் சரியான வழி அமைத்துக் கொடுத்த மகா புருஷரை நாம் மறக்கவில்லை.

மனித குலத்துக்கு அஹிம்சை வழியின் பெருண்மையை நிரூபித்துக் காட்டிய மகாத்மாவை நாம் மறக்கவில்லை.

ஏழைகளின் துயரைத் தம் துயராக எண்ணிக் கண்ணீர் விட்ட தீனபந்து கரம்சந்திர மோகனதாஸ் காந்தியை நாம் மறக்கவில்லை.

காந்திமகாத்மாவுக்குத் தமிழ் நாட்டு மக்கள் தகுந்த ஞாபகச் சின்னம் எழுப்பி விட்டார்கள்.

பாரதத்துக்குப் புத்துயிர் அளித்த மகாத்மாவுக்குத் தமிழ் மக்கள் சமர்ப்பித்த காணிக்கை மகாத்மா மணிமண்டபமாக எழுந்திருக்கிறது.

கருங் கல்லினாலும் சுண்ணாம்பினாலும் கட்டிய மாளிகையாகத் தோன்றினும், இரும்பினாலும் சிமென்டினாலும் நிர்மாணித்த மாளிகையாகக் காட்சி யளித்தாலும் அதன் சின்னம் அதிகாரமும் ஆணையும் அல்ல.

அன்பும், ஆர்வமும், ஆசையும், பாசமும் அப்படியே உருவான எழில் மாளிகையாகக் காட்சி தருகிறது. தமிழ் மக்கள் தங்கள் இதயம் கவர்ந்த காந்தி மகாத்மாவுக்குப் பக்தியோடு சமர்ப்பித்த காணிக்கை. ஆயிரக் கணக்கில், பதினாயிரக்கணக்கில், லட்சக் கணக்கில் காலணா முதல், நாற்பதாயிரம் ரூபாய் வரையில் மனமுவந்து மகிழ்ச்சியுடன் கொட்டிக் கொடுத்த நன் கொடைகளைக் கொண்டு நான்கு லட்ச ரூபாயில் கட்டிய புனிதமான அன்புத் திருப்பணி.

தமிழகத்தின் தலைநகரில் மகாத்மாவின் மணி மண்டபமாகத் தலை நிமிர்ந்து நிற்கிறது. கிண்டி ராஜபவனத் தோட்டத்தில் தமிழ் நாட்டின் பண்போடு அழகிய சிறு கோபு













ரத்தை நடுநாயகமாகக் கொண்டு இருபுறமும் மகாபலிபுரம் கடற்கரை கற்கோயில் கோபுரம்போல் அமைந்த அற்புதக் கோயிலாகக் காட்சி தருகிறது.

மண்டபத்தில் விசாலமான திறந்த வெளிப் பிரார்த்தனை மண்டபம் இருக்கிறது. காந்தி மகான் தம் வாழ் நாளில் எதை மறந்தாலும் பிரார்த்தனையை மறந்ததில்லை அல்லவா! அதை மனத்தில் கொண்டே இந்தப் பிரார்த்தனைக் கூடத்தை அமைத்திருக்கிறது. சாதி சமய வகுப்பு பேதமற்ற எல்லா மக்களும் பிரார்த்தனை செய்வதற்கு வேண்டிய சூழ்நிலையுடன் மகாத்மா மணிமண்டபம் ஒளிவீசித் திகழ்கிறது.

மணிமண்டபத்தின் தூண்களில் தமிழ் நாட்டுப் புலவர்கள், நாயன்மார்கள் திருவுருவங்கள் திகழ்கின்றன. வடநாட்டுக் கவிகள் மகான்களின் திரு உருவங்கள் பொறிக்கப் பட்டிருக்கின்றன. இயேசு நாதரின் திருக்கோலம், புத்த பிரானின் கருணை வடிவம், காந்தி மகானுக்குப் பிடித்தமான குடிசைத்தொழிலின் காட்சிகள் இவற்றுடன் காந்தி மண்டபம் கம்பீரமாகக் காட்சி தருகிறது.

இன்னும் மண்டபத்தின் சுவர்களில், காந்தி மகானின் அமுதமொழிகள், திருக்குறள், திரு மந்திரம், திவ்யப்பிரபந்தம், திருவாசகம், பைபிள், திருக்குரான் முதலிய அறி நூல்களில் இருந்து எடுத்த பொன்மொழிகள் பொறிக்கப் பட்டிருக்கின்றன.

இத்தகைய மணிமண்டபத்தைத் தமிழ் நாட்டின் தவப் புதல்வர், தமிழ் மக்களின் உள்ளத்தைத் தமது அன்புப் பணியினாலும், அறிவின் சிறப்பினாலும் பரிபூரணமாய்க் கவர்ந்த தலைவர் ராஜாஜி அவர்கள் தைப்பூசத் திருநாள் அன்று அதாவது ஜனவரி 27உ திறந்து வைக்கிறார்.

காந்தி மகான் அமரரான நேரத்தில் மாலைமணி ஐந்தரைக்கு ராஜாஜி மணி மண்டபத்தைத் திறந்து வைக்கிறார்.

ஒப்பற்ற மனிதத்தன்மை பொருந்திய இந்தப் புனிதத் திருவிழாவில் தமிழ்நாடெங்கும் உள்ள தமிழ் அன்பர்கள் மிகுந்த நன்றியுணர்ச்சியுடன் கலந்து கொள்கிறார்கள்.

இந்த உத்தமத் திருப்பணியை முதன் முதலில் உற்சாகமாக ஆரம்பித்து, காந்தி மணிமண்டபக் கால்கோல் விழாவை நடத்தி வைத்த பேராசிரியர் கல்கி திரு ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள், தம்முடைய முயற்சி இப்படி ஓங்கி வளர்ந்து நிற்பது கண்டு ஆனந்தித்து வான வீதியில் வந்து நின்று திறப்பு விழாவில் கலந்து கொண்டு மகிழ்வார் என்பதில் சந்தேகமில்லை.

மகாத்மா காட்டிய புதிய வழியான அன்பு வழி, அஹிம்சை வழி எத்தனையோ ஆண்டுகளுக்குப் பயன்படக் கூடிய வழி. இந்த வழியை அழியாமல் நிலைத்திருக்கக் கூடிய வகையில் அவருடைய போதனைகளைப் பரப்புவதற்குச் சிறந்த நிலையமாகக் காந்தி மகானின் அஸ்திக் கலசத்தை அஸ்திவாரமாகக் கொண்டு எழும்பியுள்ள இந்த காந்தி மணிமண்டபம் திகழும் என்று உறுதியுடன் பிரார்த்திப்போமாக!

வாழ்க காந்தி மகான்! வாழ்க காந்தி மணி மண்டபம்!

---

காந்தி மணி மண்டபத் தூண்களில் காணும் மகான்கள் கவிகள் முதலியவர்களின் திருவுருவத் தோற்றங்களையும் மண்டபக் கோபுரத்தையும் படங்களில் காணலாம்.

# என்ன சேதி?

## இலங்கையின் பெருமைக்கு இழுக்கு

சென்ற இதழில் இலங்கையைப் பற்றி நாம் எழுதிய பின் அங்கு சம்பவங்கள் மின் வேகத்தில் நிகழ்ந்து வருகின்றன. இலங்கை மந்திரி சபையிலிருந்து மற்றொரு தமிழ் மந்திரி ஸ்ரீ எஸ். நடேசன் தமது பதவியை ராஜிநாமா செய்துள்ளார். ஸ்ரீ நடேசன் சர்க்கார் கட்சியான ஐக்கிய தேசியக் கட்சியின் ஆரம்பகர்த்தாக்களில் ஒருவர். காலஞ் சென்ற இணையற்ற இலங்கைப் பெரியார் சர் பொன்னம்பலம் இராமநாதனின் மருமகனுமாவார். இவரோடு மற்றும் சர்க்கார் கட்சியைச் சேர்ந்த பல தமிழ் அங்கத்தினர்கள் கட்சியிலிருந்து ராஜிநாமாச் செய்து எதிர்க் கட்சியில் சேர்ந்து கொண்டுள்ளனர்.

இலங்கையில் தமிழ் பேசும் மக்கள் பெரும்பான்மையோராக இருக்கும் பிரதேசங்கள் அடங்கிய தமிழ் ராஜ்யத்தை அமைக்க வேண்டும் என்று பார்லிமெண்டில் உள்ள தமிழ் அங்கத்தினர்கள் அறிக்கை விடுத்திருக்கிறார்கள்.

சிங்கள பாஷையைப் போல் தமிழ் மொழியும் ராஜாங்க பாஷையாக இருக்க வேண்டுமென்ற தர்ம நியாயமான கோரிக்கையை வற்புறுத்தித் தமிழ் மந்திரிகள் எவ்வளவோ வேண்டிக் கொண்டனர். அவர்களுடைய பேச்சுக்கள் சிங்களத் தலைவர்களின் செவிகளில் விழாததால், அவர்கள் தங்கள் பதவிகளை உதறித் தள்ளும்படியான நிலைமை ஏற்பட்டிருக்கிறது.

எட்டு ஆண்டுகளுக்கு முன் இலங்கையின் முதலாவது பிரதம மந்திரியான காலஞ் சென்ற ஸ்ரீ டி. எஸ். சேனநாயகாவின் தலைமையில் ஐக்கிய தேசியக் கட்சி ஆரம்பிக்கப்பட்டபோது, ஜாதி. மத, வகுப்பு பேதமின்றி எல்லோரும் சரி சமானமாக நடத்தப்படுவார்கள் என்றும், சிங்களம், தமிழ் இவ்விரு மொழிகளும் அரசாங்க மொழிகளாக இருக்கும் என்றும் உத்தரவாதம் அளிக்கப்பட்டது. அந்த உத்தரவாதத்தின் மீதே பல தமிழ்ப் பிரமுகர்களும் சர்க்கார் கட்சியான ஐக்கிய தேசியக் கட்சியில் சேர்ந்தார்கள். ஆனால், இப்போதோ அந்த வாக்குறுதியை உறுதிப்படுத்த இலங்கை சர்க்கார் தவறி விட்டார்கள்.

தமிழ் மொழிக்கு உரிய அந்தஸ்தை அளிக்காததன் விளைவாக இலங்கை சர்க்கார் சுதந்திர இலங்கையின் சிற்பியான ஸ்ரீ டி. எஸ். சேனநாயகாவின் பெயருக்கும் இலங்கையின் பெருமைக்கும் இழுக்கைத் தேடிக் கொண்டிருக்கிறார்கள். தமிழ் மொழியையும் ராஜாங்க பாஷையாக அங்கீகரித்தாலன்றி எதிர்காலத்தில் இன்னும் பல விபரீதங்களைச் சிருஷ்டித்துக் கொண்டவர்களாவார்கள் என்பதில் சந்தேகமில்லை.

## பேருண்மை கண்ட அமெரிக்கப் பிரமுகர்

பெஞ்ஜமின் பிராங்க்ளின் என்ற அமெரிக்கப் பிரமுகரின் இருநூற்று ஐம்பதாவது பிறந்ததின விழா சமீபத்தில் உலகம் எங்கும் கொண்டாடப்பட்டது. அமெரிக்காவின் அரசியல் சிற்பிகளில் ஒருவராகத் திகழ்ந்த பெஞ்ஜமின் பிராங்க்ளின் எண்பத்து நாலு வயது வரை திடகாத்திரத்துடன் வாழ்ந்தார். பிரபல விஞ்ஞானியாகவும், சிறந்த சிந்தனையாளராகவும், தத்துவ ஞானியாகவும், ராஜதந்திரியாகவும், அர்த்த சாஸ்திர பண்டிதராகவும் திகழ்ந்த பெஞ்ஜமின் பிராங்க்ளினின் வாழ்க்கைக்குச் சிகரமாக அமைந்தது. ஆண்டவனிடத்தில் அவருக்கு இருந்த பக்தியும் நம்பிக்கையும் தான். "உலகத்தின் சிருஷ்டிகர்த்தா எல்லாம் வல்ல இறைவனே. அவனின்றி அணுவும் அசையாது" என்ற பேருண்மையை அமெரிக்கர்களுக்கு ஆணித்தரமாக எடுத்து உபதேசித்த பெருமை பிராங்க்ளினுக்கு உரியது. அசைக்க முடியாத கடவுள் நம்பிக்கையை இடைவிடாது உபதேசித்து வந்த பிராங்க்ளின் பிறந்த அமெரிக்கா இன்று ஆண்டவன் அருளுக்கு ஒவ்வாத அணுகுண்டு சக்தியில் நம்பிக்கை கொண்டிருப்பது காலத்தின் கோலந்தான். அவருடைய பிறந்த தின விழாவை ஒட்டியாவது, இந்த மகத்தான மனித தர்மத்தை உணர்ந்து நடைபெற வழி ஏற்படும் என்று எதிர்பார்க்கலாமா?

## பொன் விழா

வேங்கட ரமண ஆயுர்வேத வைத்திய சாலையும் கல்லூரியும் தோன்றி ஐம்பது ஆண்டுகள் ஆகிவிட்டன. நாளது 29-ம் தேதி மயிலாப்பூர் கச்சேரி சாலையிலுள்ள வைத்தியசாலைக் கட்டடத்திலே சென்னை

# குரங்குச் சேஷ்டை வேண்டாம்!

எஸ். ஆர். ஸி. புதிய ஏற்பாட்டிலிருந்து கிளம்பியுள்ள சோதனை

# விஷத்துக்குப் பின் அமுத உதயம்



கவர்னர் தலைமையில் அதன் பொன் விழா மிகச் சிறப்பாக நடக்கப் போகிறது.

எத்தனை வளர்ச்சி பெற்றிருந்தும், இன்னும் நமது சுதந்திர பாரதத்தில் நமது நாட்டு வைத்திய முறைகளுக்குப் போதிய செல்வாக்கு அரசாங்கத்தில் ஏற்படவில்லை. அன்னிய ஆதிக்கம் உச்சநிலையிலிருந்த அந்நாட்களில் ஆயுர்வேதத்தின் நிலை எப்படியிருந்திருக்க வேண்டும் என்று ஊகித்துக் கொள்ளலாம். இருப்பினும் அதன் சிறப்பை யுணர்ந்து ரூ. 60,000 ஒதுக்கி ஒரு இலவச வைத்திய சாலையையும், ஆயுர்வேத வைத்தியக் கல்லூரியையும் ஏற்படுத்த வேண்டும் என்றால் ஒருவருக்கு எவ்வளவு துணிச்சலும், மேதா விலாசமும் தேச பக்தியும் இருந்திருக்க வேண்டும்! அந்த ஒருவர் யார்?

1908-ம் ஆண்டில் சென்னையில் காங்கிரஸ் மகாசபையைக் கூட்டியவரும், சென்னையில் சமஸ்கிருத கல்லூரியை ஸ்தாபித்தவரும், மகா கவி பாரதியாரின் கவிதைத் திறனைப் பாராட்டி அவரது பாடல்களைப் பிரசுரித்தவரும், சென்னை கவர்னர்கள் ஆலோசகர் குழுவில் பணியாற்றியவருமான வி. கிருஷ்ணஸ்வாமி அய்யர் அவர்கள்தான்!

மகான்களை மகான்களே அறிவர். இந்த வேங்கடரமண வைத்திய சாலையைப் பார்த்து விட்டு, மகாத்மா காந்தி யடிகள் "இந்த ஸ்தாபனத்தைப் பார்க்க நேர்ந்ததில் நான் அளவுகடந்த மகிழ்ச்சியடைந்தேன். எனக்குக் காலஞ் சென்ற மகா புருஷர் வி. கிருஷ்ணஸ்வாமி அய்யர் அவர்களின் கொடைத் திறன்தான் நினைவுக்கு வருகிறது!" என்று எழுதியிருக்கிறார். மகாத்மா காந்தியடிகளால் மகா புருஷர் என்றழைக்கப் பட்ட பேறு தமிழர் ஒருவருக்குக் கிடைத்தது!

"செய்தாரில் பெரியர் சிதையாதவர்" என்ற ஆன்றோர் மொழிக்கு ஏற்ப மகா புருஷரின் புதல்வர்களாகிய ஸ்ரீ கே. பாலசுப்பிரமண்ய அய்யரவர்களும் ஸ்ரீ கே. சந்திரசேகரன் அவர்களும் மேற்படி வைத்திய சாலையையும் கல்லூரியையும் போற்றிப் பாதுகாத்து வளர்த்து வந்திருக்கிறார்கள். இவர்களுடைய மேற்பார்வையில் வேங்கட ரமண வைத்தியசாலைக்குப் பல கிளைகள் ஏற்பட்டிருக்கின்றன. ஆயுர்வேதக் கல்லூரியில் பயின்ற மாணவர்கள் இன்று தேசத்தின் பல இடங்களில் பெயரும் புகழும் பெற்று விளங்குகிறார்கள்.

ஞாயிற்றுக்கிழமை காலை (29உ) நீதிபதி பஷீர் அஹமத் ஸ்ரீ கே. பாலசுப்பிரமண்ய அய்யர் அவர்கள் உருவப் படத்தைத் திறந்து வைக்கிறார். ஸர் மகம்மது உஸ்மான் தலைமை தாங்குகிறார்! மாலை கவர்னர் தலைமையில் பொன் விழா நடைபெறுகிறது. அதற்கு முந்தைய நாள் ஆயுர்வேத வைத்திய சாஸ்திர நிபுணர்களின் ஆராய்ச்சிக் கூட்டமும் நடக்கவிருக்கிறது. வேங்கட ரமண வைத்திய சாலையின் பொன் விழா வைபவங்களுக்குப் பொது மக்கள் விஜயம் செய்து சிறப்பிக்க வேண்டும்.

# சிவப்புப் புடவை

ரா. வேங்கடரத்தினம்

சங்கமேசுவரன் தன் பெயர், படிப்பு, பட்டம் பதவி எல்லாம் புதிதாக எழுதி வந்திருந்த பலகையை வாசல் திண்ணையில் நின்ற வண்ணம் ஓட்டின் குறட்டிலே தொங்க விட்டு விட்டு, அதை அழகு பார்த்துக் கொண்டு நின்றான். அவனை அழகு பார்த்துக் கொண்டே உள்ளேயிருந்து நந்தினி வந்தாள். 'டாக்டர் சங்கமேசுவரன், பி. எஸ்ஸி., எம் பி., பி. எஸ்.,' என்றெழுதியிருந்ததை அவள் வாய் வாசித்தது.

அவள் வந்ததைக் கவனித்ததும் சங்கமேசுவரன் அவளை வினவினான்: "எல்லாம் சரியாகத்தான் இருக்கிறது. உனக்குப் பிடித்திருக்கிறதல்லவா!"

"இப்பொழுதுதானே போர்டு மாட்டியிருக்கிறீர்கள்! உங்களுக்குத் தொழிலில் வரும்படி எப்படி வருகிறது என்பதைப் பார்த்துத்தான் சொல்ல முடியும்!"

நந்தினியைச் சங்கமேசுவரன் மணந்து இரண்டு, இரண்டரை வருஷங்கள் ஆகியும், அவர்கள் இப்பொழுதுதான் குடித்தனம் வைத்தனர். கல்யாணத்தின்போது சங்கமேசுவரன் வைத்தியப் படிப்பின் மூன்றும் வகுப்பு மாணவனாக இருந்தான். அவள் பி. ஏ. சேர்ந்திருந்தாள். இப்பொழுது நந்தினியும் பி. ஏ. ஆகி விட்டாள்; அவனும் டாக்டர் படிப்பை முடித்திருந்தான்.

'சாமி' என்ற குரல் வாசலில் கேட்டதும் சங்கமேசுவரன் வெளியறைக்குச் சென்றான். ஒரு ஒற்றை மாட்டு வண்டி வாசலில் நின்று கொண்டிருந்தது. வண்டிக்காரன்தான் 'சாமி' என்றழைத்தது. சங்கமேசுவரன் அவனை ஏற இறங்கப் பார்த்து, "என்ன வேண்டும்!" என்று கேட்டான்.

"வண்டியில் ஒரு கிழவனார் வந்திருக்கிறாரு. அதுதான் நீங்கள் இருக்கிறீங்களா என்று பார்த்துக் கொண்டு, அவரை இறங்கி வரச் சொல்லலாம் என்று நினைத்து வந்தேனுங்க. அவர் வண்டியிலே படுத்துக் கொண்டிருக்கிறார்" என்று வண்டிக்காரன் சொன்னான்.

"கூட்டிக் கொண்டு வா இங்கே" என்று சொன்ன சங்கமேசுவரன் அவசரம் அவசரமாக உள்ளே வந்து 'புஷ்கோட்'டை மாட்டிக் கொண்டான். நந்தினி அவனிடம் வந்து காதோடு காதாக "முதல் 'கேஸ்' என்பதை நினைவில் வைத்துக் கொண்டு வந்தவரைக் கவனித்துக் குணப்படுத்தி விடுங்கள். நீங்கள் எடுத்த எடுப்பிலேயே நல்ல பெயர் வாங்கி விட வேண்டும்" என்று மொழிந்தாள்.

அவன் பதிலுக்குக் கண் சிமிட்டி விட்டு, 'ஸ்டெதாஸ் கோப்'புடன் வெளியறைக்கு வேகமாகச் சென்றான்.

"உட்காருங்கள்!" என்று உபசரித்துக் கொண்டே முதல் தடவையாகத் தன் சுழல் நாற்காலியில் சென்று அமர்ந்தான். கிழவர் மடமட வென்று இருமித் தள்ளினார். அவன் அவர் உடலைப் பரிசோதித்தான்.

"எவ்வளவு நாளாக இந்த மாதிரி உங்களுக்கு இருமுகிறது!"

"அதை ஏன் கேட்கிறீர்கள்! ஒரு வருஷமாயிற்று, இந்த இருமல் வந்து. பச்சிலை மூலிகை, லேகியம், சூர்ணம், தைலம் என்னென்னவோ எல்லாம் சாப்பிட்டுப் பார்த்தாயிற்று" என்று கிழவர் அலுத்துக் கொண்டார்.

"ஒன்றிலும் குணம் இல்லையாக்கும்!"

"ஆமாம். என் உடம்புக்கு நாட்டு மருந்துகள் ஒன்றும் பிடிப்பதில்லை."

சங்கமேசுவரன் வக்கீல் போலக் கேட்டான்: "பின்னே நீங்கள் ஆங்கில வைத்தியர் யாரிடமாவது காட்டி, மருந்து வாங்கிச் சாப்பிட்டிருக்கலாமே! அல்லது ஊசி போட்டுக் கொண்டிருக்கலாமே!"

"இந்தப் பக்கத்திலேயே ஆங்கிலப் படிப்புப் படித்து விட்டு வந்திருக்கிற டாக்டர் யாரும் இல்லை. அதனால்தானே இவ்வளவு தொந்தரவும்! இங்கிருந்து எட்டு மைல் நடந்தோ,

வண்டியிலோ ராசிபுரம் போனால் தான், ஆங்கில வைத்தியர் இருக்கிறார்."

இவ்வாக்கியங்களைக் கேட்பதற்கு அவனுக்குக் 'குளு குளு' என்று இன்பமாக இருந்தது. அந்தச் சுற்று வட்டாரத்தில் ஆங்கில வைத்தியர் யாரும் இல்லை என்பதையெல்லாம் நன்றாக உறுதிப்படுத்திக் கொண்டு தான் சங்கமேசுவரன் தன் தொழிலைத் தொடங்க அந்தக் கிராமத்தைத் தேர்ந்தெடுத்திருந்தான். கிழவரின் சொற்கள் அப்பிராந்தியத்துக்கு ஆங்கில வைத்தியத் துறையில் அவன்தான் தனிக் காட்டு ராஜா என்று நிரூபிப்பது போல் இருந்தன.

"ஏழெட்டு ஊசி போட்டால், உங்கள் இருமல் நின்று விடும். ஒன்றும் பயமில்லை" என்று அவன் கூறியதும், கிழவர் "எனக்கு வேண்டியது அவ்வளவுதான்" என்று பெருமூச்சு விட்டார்.

"நீங்கள் இருக்குமிடம்!" என்று அவன் கேட்கவே, கிழவர் கூறினார்: "என்னையா கேட்கிறீர்கள்! நம் அம்மன் கோயில் இருக்கிறதல்லவா! அதற்குப் பக்கத்தில் வடக்குத் தெற்காக ஒரு வீதி போகிறது. அந்த வீதியில் மூன்றாவது வீடு, மேற்குப் பார்த்தது."

"ஆமாம். உங்களுக்கு நான் இங்கே புதிதாக வந்து தொழில் ஆரம்பித்திருக்கிறேன் என்பது எப்படித் தெரிந்தது!" என்று சங்கமேசுவரன் சிறிது வியப்புடன் கேட்டான்.



"என்னுடைய பக்கத்து வீட்டுப் பையன் இந்தப் பக்கம் வந்தவன் உங்கள் போர்டைப் பார்த்திருக்கிறான் போலிருக்கிறது. உடனே என்னிடம் வந்து சொன்னான். உடனே வண்டி வைத்துக் கொண்டு வந்தேன்."

சங்கமேசுவரனுக்குக் கிழவர் முகம், பேசிய விதம், அவருக்கு ஆங்கில வைத்தியத்தில் இருந்த நம்பிக்கை எல்லாமே பிடித்திருந்தன.

சங்கமேசுவரன், "உங்கள் பெயர் என்ன!" என்று கேட்டான்.

"ராமாச்சாரி."

"உங்கள் தெருவுக்கு வந்து, ராமாச்சாரி யார் வீடு எது என்று விசாரித்தால் சொல்வார்கள் அல்லவா!"

"ஓ, தாராளமாக!" என்ற கிழவர் 'ஆனால்' என்று இழுத்ததும் அவன் திகைத்தான்.

"உங்கள் மோட்டார் கார் ரொம்பப் பெரிதோ! ஏன் கேட்கிறேன் என்றால், எங்கள் தெருவில் இரண்டு சருகிலும் வீதியை அடைத்து நூல் 'பாவு' போட்டு வைத்திருப்பார்கள். மோட்டார் பெரிதாயிருந்தால் போவது கஷ்டப்படும்."

"என் கார் சின்னதுதான்" எனக் கூறிவிட்டு, அவன் கேட்டான்:—"ஓகோ! நீங்களெல்லோரும் நெசவுக்காரர்களோ!"

"ஆமாம், கைத்தறிதான் எங்கள் குலதெய்வமே. நீங்கள் இந்தப் பக்கத்துக் கிராமங்களில் எங்கே போனாலும் பார்க்கலாம். தெருவடைத்து நூல் பாவு போட்டுக்கொண்டிருப்பதை" என்றார் அவர்.

சற்று நேரத்தில் வண்டியில் ராமாச்சாரி கிளம்பி விட்டார்.

## 2

"இருமல் இப்பொழுது அவ்வளவு இல்லை போல் இருக்கிறதே" என்று பட்டு நூலை வீசனத்தில் சுற்றிக் கொண்டே நாச்சியாரம்மாள் அன்புடன் விசாரித்தாள்.

"அவ்வளவென்ன, அதில் கால்வாசி கூட இப்பொழுதில்லை. நீ தான் பார்க்கிறாயே. முன்னெல்லாம் அரை மணியாவது இராத்தூக்கமுண்டா!"

நாச்சியாரம்மாள் வயதுப்படிக் கிழவிதான். ஆனால் பார்ப்பதற்கு நாற்பது, நாற்பத்தைந்து வயது ஆன ஸ்திரீ போலத்தான் தோன்றுவாள். மேனி முழுதும் குளிக்கையில் தேய்த்துக் கொண்ட மஞ்சள் குத்துவிளக்குப் போல ஒளி வீசும். வயது ஆனாலும் அதிகம் உதிராத கூந்தல் பின் தலையிலே கொண்டையாகி ஆண்டாளை நினைவூட்டும். தினமும் விடிவதற்கு முன் எழுந்ததும் தறிக்கும் ஒரு குங்குமப் பொட்டு இட்டுக் கும்பிட்டு விட்டுத் தான் அன்றையப் பொழுதைத் தொடக்கி வைப்பாள்.

அவள் வீசனத்தை ஆணியில் மாட்டிவிட்டு, ராமாச்சாரியினிடம் சென்றாள்.

"உங்கள் உடம்பு முக்கால்வாசி குணமாகி விட்டது. நீங்கள் பழையபடி வேலையை ஆரம்பிக்கும் முன் முதல் காரியமாக..." என்று ஆரம்பித்த நாச்

சியாரம்மாள் "என்ன சொல்ல வந்தாய்!" என்று கேட்டார் கிழவர்.

"நீங்கள் வெளியிலே பாவு போட்டு வைத்திருக்கிறீர்களே சிவப்புப் புடைவை, அதற்கு என்ன கரை போடப் போகிறீர்கள்!"

"நான் இன்னும் நிச்சயம் பண்ணவில்லை. மஞ்சளில் கோபுரக் கரை; நடுவில் பச்சை நூல் கொடுத்து, இரண்டு விரற்கடை அகலத்திலே சரிகை கொடுத்துக் கொஞ்சம் நன்றாகவே செய்யலாம் என்று ஒரு உத்தேசம்" என்றார் அவர்.

"ரொம்ப சரி" என்று திருப்தியாக நாச்சியாரம்மாள் எதிரொலித்தாள்.

"ஏன்! என்ன விசேஷம்!"

"வேறொன்றுமில்லை. அந்தப் புடவை ஆரம்பித்த நல்ல வேளையைப் பாருங்கள்! மறுநாளே பக்கத்து வீட்டுப் பையன் வந்து நல்ல செய்தி சொன்னான், புது டாக்டர் ஒருவர் வந்திருப்பதாக. மாதக் கணக்காக இருமிக் கொண்டிருந்தீர்கள். அந்த டாக்டர் கைராசியினால் குணமாகி விட்டது உங்கள் உடம்பு. அந்தப் புடவையை முதற் காரியமாக செய்து முடியுங்கள். அதை விற்க வேண்டாம்......"

ராமாச்சாரி புன்னகை பூத்தார்.

"நோயுடன் கிடந்து பிழைத்திருக்கிறீர்கள். அந்தப் புடைவை செய்தானதும் அம்மனுக்குச் சாத்திவிடலாம் என்று வேண்டிக் கொண்டிருக்கிறேன்" என்று கூறி நாச்சியாரம்மாள் நகைத்தாள்.

"அப்படியே! உனக்காக செய்வதாக நினைத்துக் கொண்டு செய்கிறேன் போதுமா!"

"ராம ராமா" என்று அவள் காதைப் பொத்திக் கொண்டாள். "அம்மனுக்கு என்று சொல்கிறேன்; எனக்கு என்று எண்ணிக் கொண்டு செய்வதாகச் சொல்கிறீர்களே, அம்மன் எங்கே! நான் எங்கே!" என்றாள் கிழவி.

## 3

நந்தினியை அருகில் உட்கார்த்திக் கொண்டு, சங்கமேசுவரன் அப்பொழுது காரில் நகர் வலம் வந்து கொண்டிருந்தான்.

"அந்தக் கிழவருக்கு உடம்பு இப்போது குணமாகி விட்டதல்லவா!"

"ஓ, குணமாகி விட்டதே."

நந்தினி உவகையோடு கூறினாள்: "ஆக, முதல் கேஸில் நல்ல பெயர் வாங்கிவிட்டீர்கள்; அவ்வளவுதான் வேண்டியது!"

நடுத்தெருவில் படுத்திருக்த நாயின்மீது ஏறாத வண்ணம் வாகனத்தை ஒடித்து ஓட்டிய வண்ணம், அவன் பேசினான்: "அந்தக் கிழவர் ராமாச்சாரியின் மூலம்தான் எனக்கு இப்பொழுது இத்தனைக் கூட்டமும் வருகிறது. அவர் உடம்பு குணமானதே எனக்குப் பெரிய விளம்பரம் என்று சொல்லவேண்டும்."

சங்கமேசுவரன் காரை மெதுவாக ஓட்டினான்; காரணம் தெருவில் பாதியை செசவுக்காரர்கள் ஆக்கிரமித்திருந்தனர்.

"நந்தினி, கவனித்துக் கொண்டு வா. ராமாச்சாரியின் வீட்டைக் காண்பிக்கிறேன்"



என்று அவன் கூற, அவள் நிமிர்ந்து அமர்ந்து வெளியே கவனித்தாள்.

"இதுதான்!"

நந்தினி கவனித்தாள். வீடு பூட்டியிருந்தது.

"அந்தப் புடவையைப் பார்த்தீர்களா! எவ்வளவு ஜோராய் இருக்கிறது!" என்று அவள் கூறவே, சங்கமேசுவரன் சிரித்தான்.

"அந்தப் புடவை உங்கள் ராமாச்சாரியின் வீட்டுக் கெதிரேதானே இருந்தது!" என்று அவள் அவனைக் கேட்டாள்.

"ஏன்!"

நந்தினி கூறினாள்: "எனக்கு அந்தப் புடவை வேண்டும். உங்கள் ராமாச்சாரியிடம் சொல்லி அதை வாங்கித் தாருங்கள். அதைப் பார்த்ததிலிருந்து அந்தச் சிவப்பு நிறம் என் மனத்தை விட்டு அகலவேயில்லை."

"சரி, வாங்கிக் கொடுத்து விடுகிறேன். ஆனால் அதன் விலை நல்ல சரிகை யெல்லாம் இருந்தால், ஐம்பது அறுபது ரூபாய் ஆகலாம்."

"ஆமாம்; நீங்கள் அவருக்கு வைத்தியம் செய்திருப்பதற்கு மொத்தம் அவர் உங்களுக்கு எவ்வளவு பணம் தரவேண்டியிருக்கும்!"

"ரொம்பப் போனால் இருபது ரூபாயாகும்."

"அடேடே, நாற்பது ஐம்பது ரூபாயாவது ஆகியிருக்கும். புடவையின் கிரயத்திற்கும் வைத்தியச் செலவுக்கும் சரிசமமாகப் போய் விடும் என்று நான் நினைத்தேன். நீங்கள் சொல்வதைப் பார்த்தால், அவருக்கு முப்பது நாற்பது ரூபாய் கையைப் பிடிக்கும் போல் தோன்றுகிறதே!"

அவன் புடைவை வேண்டாம் என்று சொல்லி விடுவான் என்று அவள் எதிர்பார்த்தாள்.

"என்ன யோசிக்கிறாய்! அப்படியானால் உனக்கு அது வேண்டாமா!"

"இல்லை, எனக்கு அது வேண்டும்."

சங்கமேசுவரன் இஷ்டமில்லாமல் அதற்கு இசைந்தான்.

## 4

"நேற்று மாலை உங்கள் வீட்டுப் பக்கம் வந்திருந்தேன். வீடு பூட்டியிருந்தது. எங்கேயோ நீங்கள் வெளியிற் போயிருந்தாப் போலிருக்கிறது" என்று சங்கமேசுவரன் வந்ததும் வராததுமாக விசாரித்தான்.

"ஆமாம், பக்கத்துத் தெருவுக்குப் போயிருந்தோம். அங்கே எங்களைச் சேர்ந்தவர் ஒருவர் வீட்டிலே விசேஷம்..."

ஒரு குழந்தையை இடுப்பிலே தூக்கிக் கொண்டு உள்ளே நுழைந்த பெண்ணை "உட்காருங்களம்மா" எனக் கூறிவிட்டு, சங்கமேசுவரன் சிசுவைப் பரீட்சிக்கச் சென்றான். அவன் அவ்வேலையை முடித்துவிட்டு வந்ததும், "நான் உங்களிடம் ஒன்று கேட்கப் போகிறேன்" என்று அவன் புதிர் இட்டதும், ராமாச்சாரி வியப்புடன் "என்ன!" என்றார்.

"வேறொன்றுமில்லை. நேற்று காரில் என்னோடு நம் வீட்டு அம்மாளும் வந்திருந்தாள். உங்கள் வீட்டை அவளுக்குக் கூடக் காட்டினேன். அதன் கண்ணிலே 'பாலி'ல் இருந்த புடவை பட்டு விட்டது......"

"எது, அந்தச் சிவப்புப் புடவையா!"

"ஆமாம்."

ராமாச்சாரி சிரித்தார்.

"ஏன்! என்ன சிரிக்கிறீர்கள்!"

"ஒன்றுமில்லை. எவ்வளவோ வித விதப் பட்டுப் புடவைகளை யெல்லாம் விட்டுவிட்டு அம்மாள் நம் நூல் சேலையைப் பிடித்தார்களே என்றுதான் ஆச்சரியப்பட்டேன்."

"நூல் சேலையாய் இருந்தா லென்ன! அந்தச் சிவப்பு நூலின் பளபளப்புக் கெதிரே பட்டு நூல் கூட நிற்காது போல் இருக்கிறதே. அவ்வளவு நன்றாய் இருந்ததே அது!"

அடக்கமாக ராமாச்சாரி கேட்டார்: "அந்தப் புடவை அத்தனை நன்றாய் இருக்கிறது என்றா சொல்கிறீர்கள்!"

"ஆமாம்." அவன் அழுத்தந் திருத்தமாகப் பதில் கூறினான்.

ராமாச்சாரிக்கு உள்ளம் உவகையில் நிரம்பி வழிந்தது.

"கிரயம் என்ன ஆகும்!"

"கிரயம் இருக்கட்டும்."

சங்கமேசுவரனும் விலையைப் பற்றிப் பேசுவதை விட்டு விட்டுச் சொன்னான்: "சரி, விலையைப் பற்றிப் பின்னால் பார்த்துக் கொள்ளலாம். புடவை ஆனதும் கொண்டு வாருங்கள்."

கிழவரால் சொல்லவும் முடியவில்லை; மெல்லவும் இயலவில்லை. நாச்சியார் அம்மாவோ அதை அம்மனுக்காக எடுத்து வைக்கச் சொல்லியிருக்கிறாளே என்று அவர் நினைந்தார்.

"என்ன யோசிக்கிறீர்கள்! அதைத் தர முடியுமா, முடியாதா!"

ராமாச்சாரிக்கு அவன் வேண்டுகோளை நிராகரிக்க முடிய வில்லை. 'மனைவி எடுத்து வைக்கச் சொல்லியிருக்கிறாள்' என்று சொன்னால் நன்றாய் இருக்குமா! மாதக் கணக்காக இருந்த வியாதியை மாயமாய் மறையச் செய்த டாக்டர் எவ்வளவு தங்கமான மனிதர்! அவர் கேட்பதைத் தட்டுவதா! அம்மனுக்கென்று அதே போல இன்னொரு புடவையை நெய்து விட முடியாதா!

"ஏன், வேறு யாருக்காவது அதை நெய்தீர்களா!" என்றான் சங்கமேசுவரன்.

கிழவரால், "அதெல்லாம் ஒன்று மில்லை" என்பதைத் தவிர வேறு எந்தவிதமான பதிலும் கூற முடியவில்லை.

சங்கமேசுவரன் சிரித்துக் கொண்டே சொன்னான்:—"அதென்னவோ எனக்குத் தெரியாது. அந்தப் புடைவையை உங்களிடமிருந்து வாங்கித் தருவதாக நான் சொல்லிவிட்டேன். நான் கொடுத்து விட்ட வாக்குறுதியைக் காப்பாற்றுவதற்கு நீங்கள் தான் உதவி செய்யவேண்டும்!"

கிழவர் "சரி, நான் இரண்டு நாட்களில் அதை முடித்துக்கொண்டு வருகிறேன்" என்று கூறிவிட்டுக் கிளம்பினார்.

## 5

நாச்சியாரம்மாளுக்கு மூக்குக்கு மேல் அளவுகடந்த கோபம்!

"உங்கள் காரியம் எனக்குக் கட்டோடு பிடிக்கவில்லை" என்று முகம் சிணுங்கிக் கொண்டே சொன்னாள். கிழவனார் காதில் விழாதவர் போல் இருந்தார்.

"நேற்று இராத்திரி முழுக்க இருமித் தீர்த்து விட்டீர்களே" என்று அவள் கேட்டதற்கும் அவர் வாயைத் திறக்கவில்லை.

"நம் அம்மனுக்காக அந்தச் சிவப்புச் சேலையை எடுத்து வையுங்கள். அதை அம்மனுக்குச் சாத்துவதாக வேண்டிக் கொண்டிருக்கிறேன் என்று நான் சொன்ன போது, சரியென்று தலையாட்டிவிட்டு, இப்படிச் செய்து வைத்திருக்கிறீர்களே. எல்லாம் தெய்வக் குற்றத்தின் பலன் தான் இப்படி இருமல் மீண்டு விட்டது. இல்லாவிட்டால் நேற்றுவரை சரியான உங்கள் உடம்பு இப்பொழுது வக்கரிப்பானேன்!"

கிழவரும் விட்டுக் கொடுக்கவில்லை. "அம்மனுக்கு அதேபோல் இன்னொரு புடவை நெய்து சாத்தினால், அம்மன் ஏற்றுக் கொள்ளவே மாட்டாளோ! சும்மா ஏன் கத்துகிறாய்!"

"ஏன், உங்கள் டாக்டர் சம்சாரத்துக்கு அந்தமாதிரிப் புடைவை ஒன்று தயாரித்துக் கொடுத்தால் அவள் உடம்பில் நிற்காதோ!"

"நான் சொல்வதைப் புரிந்து கொள்ளாமல் குழந்தை கணக்காய்ப் பேசுகிறாயே! அவ்வளவு பெரிய மனுஷர், டாக்டர் கேட்கும் போது அந்தப் புடைவையைக் கொடுக்க முடியாது என்று சொல்ல மனம் வருமா!"

"நன்றாய் இருக்கிறதே உங்கள் பேச்சு! அம்மனுக்குச் சாத்துவதாக வேண்டிக் கொண்டு விட்டுப் பிரார்த்தனையைக் காற்றிலே பறக்க விட்டு விட்டால், தெய்வம் பார்த்துக் கொண்டிருக்குமா!"

அவள் பேசியதில் அப்படி ஒன்றும் தவறில்லை என்று ராமாச்சாரிக்குத் தோன்றியது. அவர் கூறினார்: "அம்மன் தான் என் இருமலைப் போக்கினாள். இல்லை யென்று சொல்லவில்லை. ஆனால் அவள் அந்த டாக்டர் மூலமாகத்தானே என்னைக் காப்பாற்றினாள்!

அவனுக்குச் சேர வேண்டியதை அந்த டாக்டருக்குக் கொடுத்தேன். இதில் என்ன தப்பு !''

''தெய்வமும் டாக்டரும் சரிசமமாகி விடுமா !'' என்று கோபத்துடன் நாச்சியாரம்மாள் கேட்டாள்.

''அதனால் இப்போதென்ன மோசமாகி விட்டது! அடுத்த புடவை அதேமாதிரி செய்துதருகிறேன். நீ கோயிலுக்குக்கொடுத்து விடு'' எனக் கூறி விட்டுக் கிழவர் இருமினார்.

இடையில் நின்றிருந்த அந்த இருமல் சப்தத்தை மீண்டும் கேட்கவே அவளுக்கு வயிற்றைக் கலக்கியது. என்ன சமாதானம் சொன்னாலும், அவள் மனம் ஏற்கத் தயாரில்லை.

''நேற்றுத்தானே அந்தச் சிவப்புப் புடவையைக் கொண்டு போய்க் கொடுத்தீர்கள்! இன்று எப்படியும் அதை அந்த அம்மாள் கட்டிக் கொண்டிருக்கமாட்டாள். இன்று நாள் அவ்வளவு நன்றாய் இல்லை. நாளைக்கு வெள்ளிக்கிழமையாய் இருப்பதால், நாளைக்குக் கட்டிக் கொள்ளலாம் அல்லது பின்பு எப்போதாவது உடுத்திக் கொள்ளலாமென்று எப்படியும் அதை அந்த அம்மாள் உள்ளே எடுத்து வைத்திருப்பார்கள். நான் போய் விஷயத்தைச் சொல்லி, அதை வாங்கிக் கொண்டு வந்து விடுகிறேன். இல்லா விட்டால் என் மனசு கேட்காது. தெய்வக் கோபத்துக்கு ஆளாகி என்றால் வயிற்றில் நெருப்பைக் கட்டிக்கொண்டிருக்க முடியாது'' என்று நாச்சியாரம்மாள் உணர்ச்சி நிறைந்த குரலில் பேசினாள்.

கிழவருக்கு அவளை எப்படிச் சமாதானப் படுத்துவது என்று விளங்கவில்லை.

''ஆமாம், நீங்கள் உங்கள் உடம்பை டாக்டரிடம் காண்பிக்க வேண்டாமா! பழையபடி இருமுகிறதே'' என்றாள் கவலையுடன்.

''அடுத்த வீட்டுப் பையனிடம் சொல்லியனுப்பி யிருக்கிறேன் டாக்டருக்கு. இந்தப் பக்கம் போகும்போது, அவரே இங்கு வந்து என்னைப் பார்ப்பார்.''

''சரி'' யென்று கூறி விட்டு அவள் எங்கோ கிளம்புவதைப் பார்த்துக் கிழவர் கேட்டார்:—''ஆமாம், நீ எங்கே போகிறாய்!''

''கோயில் மட்டும் போய் விட்டு வருகிறேன். தெரியாத்தனமாய் இப்படித் தவறு நடந்து போய் விட்டது என்று அம்மனிடம் போய்ச் சொல்லி விட்டு வந்தால்தான் என் மனசு கேட்கும்'' எனக் கூறி விட்டு அவள் கிளம்பினாள்.

கையில் குங்குமத்தோடு சிறிது நேரம் கழித்து வீடு திரும்பிய நாச்சியாரம்மாள், தான் கிளம்பும்போது இருந்ததற்குக் கிழவர் இப்போது சற்றுச் சிரித்த முகத்தோடு இருப்பது போல் தோன்றியதைக் கவனித்தாள். கிழவர் அவள் நுழையும்போதே குறும்பாகக் கேட்டார்:—''அம்மனை நன்றாய் வேண்டிக்கொண்டு வந்தாயா, அம்மா!''

அவள் அவர் குரலில் இருந்த குறும்புத்தனத்தைக் கவனித்தாள். அவள் பதில் சொல்லாது குங்குமத்தை அவர் எதிரே நீட்டினாள்.

கிழவர் பேசினார்—''தெய்வக் குற்றம், அப்படி இப்படி என்றெல்லாம் சொன்னாயே. அதெல்லாம் ஒன்றுமில்லை. நீ கிளம்பியதும் டாக்டர் இங்கு வந்தார். பழையபடி இருமுகிறதே என்று அவரிடம் சொன்னேன். அவர் ஒரு பத்துப் பதினைந்து நிமிஷம் என் உடம்பைச் சோதனை செய்து பார்த்தார். 'இந்த இருமலுக்கும் பழைய உங்கள் வியாதிக்கும் துளிக் கூடச் சம்பந்தமில்லை. நேற்று பனியில்வெளியே படுத்துக் கொண்டிருந்திருப்பீர்கள். அதனால் தான் இருமுகிறீர்' என்றார்.''

நாச்சியாரம்மாளின் முகத்தில் புன்னகை பிரகாசித்தது. அவள் மகிழ்ச்சியோடு பேசலானாள் — ''உங்களுக்கு விஷயம் தெரியாது. எனக்கும் இப்போது கோயிலுக்குப் போன போதுதான் தெரிந்தது. நாம் தெய்வக் கோபத்துக்கு ஆளாகாமல் இருக்க வேண்டுமே என்று முதலில் பயந்தது உண்மைதான். நல்லவேளை! அப்படி ஒன்றும் நடக்கவில்லை.''

கிழவர் நாச்சியாரம்மாளின் வாயையே ஆவலுடன் கவனித்தார்.

''இப்போது கோயிலில் குருக்கள் ஐயா என்னவோ ஒரு புடவையை நனைத்துப் பிழிந்து கொடியில் உலர்த்திக் கொண்டிருந்தார். அது அசல் நம் தறிப் புடவைமாதிரி இருந்தது; புதியதாகவும் இருந்தது. கடைசியில் அவரைக் கேட்டு விட்டேன். அவர் சொன்னார்: 'டாக்டரம்மாள் தன் புருஷரிடம் வைத்தியத்துக்கு வரும் முதல் நோயாளியின் உடம்பு குணமாகிவிட்டால், அம்மனுக்கு ஒரு புடவை வாங்கிச் சாத்துவதாக வேண்டிக் கொண்டிருந்தார்களாம்.' அது நம் புடவையாகவே போய்விட்டது. நீங்கள் தான் அதற்குக் கிரயம் வாங்கிக் கொள்ளவில்லையே! ஆக நாம் சாத்தியது மாதிரிதானே!'' என்றாள்.



இந்தியாவின்
அபிவிருத்தி மற்றும்
எதிர்கால
க்ஷேமத்தை
உத்தேசித்து

# சேமியுங்கள்

இவற்றில்
முதலீடு செய்க:

12 - வருட
நேஷனல் சேவிங்ஸ்
சர்டிபிகேட்டுகள்

10 - வருட
டிரெஷரி சேவிங்ஸ் டிபாசிட்
சர்டிபிகேட்டுகள்

10 - வருட
நேஷனல் பிளான் சர்டிபிகேட்டுகள்

15 - வருட
ஆன்னியுடி சர்டிபிகேட்டுகள்

போஸ்டாபீஸ் சேவிங்ஸ் பாங்க்
டிபாசிட்டுகள்

இந்திய அரசாங்கத்தின்

# சிறு சேமிப்புத் திட்டம்

மேலும் விவரங்களுக்கும் / மற்றும் அல்லது இம் முதலீடுகள் சம்பந்தமான விதிகளுக்கும், ஸிம்லாவில் இருக்கும் நேஷனல் சேவிங்ஸ் கமிஷனருக்கோ அல்லது உங்கள் ராஜ்யத்தைச் சேர்ந்த ரீஜனல் நேஷனல் சேவிங்ஸ் ஆபீஸருக்கோ தயவுசெய்து எழுதி விசாரிக்கவும்.

# ரகுபதி  ராகவ

[அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியிலிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது]

11

**ராஜாஜி**

பௌதிக விஞ்ஞானிகள் சொல்கிறார்கள் அணுக்களுக்கு இடையில் ஒரு சக்தி உண்டு. அதனால் அணுக்கள் ஒன்றுக்கொன்று பிணைக்கப்பட்டு நிற்கின்றன என்று. இந்தப் பிரகிருதி சக்தி இல்லாவிடில், பூமி பொடியாகிப் போகும். எல்லா ஜீவராசிகளின் தேகங்களும் நீறாகிப் போகும். உயிருக்கு இடமே இராது. அசேதனப் பொருள்கள் வடிவங் கொண்டு நிலைத்து நிற்க இந்தப் பிணைப்புச் சக்தி எவ்வளவு அவசியமோ, அப்படியே சேதன உயிர்களின் வாழ்க்கைக்கு அன்பு என்கிற பிணைப்புச் சக்தியும் அவசியம். தகப்பனும் பிள்ளையும் அன்பினால் கட்டுப்படுகிறார்கள். அதுவே சகோதரர்களுக்குள்ளும், சகோதர சகோதரிகளுக்குள்ளும், நண்பர்களுக்குள்ளும், பிணைப்பைக் காக்கும் சக்தி. அன்பு என்கிற விச்வ சக்தியை நாம் கண்டு விஸ்தரித்துப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். அதைக்கொண்டு உயிருள்ள சகல பிராணிகளும் ஒன்றாக இணைந்து நிற்கச் செய்ய வேண்டும். இதுவே ஈசுவரனை அறியும் மார்க்கம். அன்பே உய்யும் வழி. வெறுப்பு நாசத்துக்கு வழி. [யங் இந்தியா 5—5—20]

ஒன்று கூட்டும் பிணைப்புச் சக்தியைப் போலவே இயற்கையில் பிரித்து விலக்கும் சக்தியும் உண்டு. ஆயினும் இவ்விரண்டில் பிணைப்பு வேகமே ஓங்கி வேலை செய்யும். பிணைப்பினால் தான் உலகத்தில் உயிர் நிலைத்து வருகிறது. பரஸ்பர அன்பினாலே தான் உலகம் நடைபெற்று வருகிறது. மற்றப் பிராணிகளை அழித்து ஒரு மனிதன் வாழ முடியாது. தன்னைத் தான் காப்பாற்றிக் கொள்வதற்காயினும் மற்றப் பிராணிகளை மனிதன் பேணுவது அவசியம்.

ஒருவரை ஒருவர் காத்து வருவதாலேதான் சமூகங்கள் நிலைத்து நிற்கின்றன. ஒரு தேசத்து மக்கள் ஒருவரை ஒருவர் மதித்து ஒருவருக்கொருவர் உதவியும் வந்து, சமூக வாழ்க்கையைக் காப்பாற்றி வருவதைப் போல் பிரபஞ்சம் முழுவதற்கும் அந்த அன்பு முறையை விஸ்தரித்துப் பெருக்க வேண்டும். குடும்பப் பிணைப்பைத் தேசத்துக்கும் சமூகத்துக்கும் விஸ்தரித்திருக்கிறோம். சமூகப் பிணைப்பை உலகளவு விஸ்தரிக்க வேண்டும். உலகம் முழுதும் ஒரு பெரிய குடும்பம் ஆக வேண்டும். [யங் இந்தியா 2—3—22]

காலனுடைய அட்டூழியம் பெரிதேயாயினும் அதற்கிடையில் உயிர் அழியாமல் இருந்து வருகிறது. பிரகிருதியில் உயிர்த் தத்துவத்தின் வேகம் மேலானது. யமனுடைய ஆதிக்கத்துக்கு இடையில் உயிர் வெற்றிபெற்று வருகிறது. உலகத்தின் உண்மைப் பண்பு அழிவல்ல. உயிர்த் தத்துவமே உலகப் பண்பு. இந்தத் தத்துவத்தைக் கண்ட பின் நாமும் அதைப் பற்றி நிற்க வேண்டும். தினசரி வாழ்க்கையில் அதைத் தர்மமாகக் கடைப்பிடித்து வாழ வேண்டும். பிணக்கமோ பகையோ ஏற்பட்டால் அன்பைக் கொண்டு அதைத் தீர்த்துக் கொள்ள வேண்டும். அன்பைச் செலுத்திப் பகைவனை வெல்ல வேண்டும். என் வாழ்க்கையில் இந்த முறையைத்தான் நான் அநுசரித்து வந்திருக்கிறேன். தப்பும் தவறும் ஆயினும் இந்த உபாயத்தைத்தான் உபயோகித்து வந்திருக்கிறேன். எல்லாச் சிக்கல்களையும் நான் தீர்த்துக் கொண்டேன் என்று சொல்ல

மாட்டேன். ஆனால் ஒன்று நிச்சயம்: வெறுப்பினால் நான் ஒன்றும் சாதித்ததில்லை. நான் கண்ட வெற்றி யெல்லாம் அன்பின் வழியேதான்.

[யங் இந்தியா 1—10—31]

மனித வர்க்கம் ஒப்புரவினால் மேம்பாடு அடைந்து வருகிறது. முன்னேற்றம் பெறச் செய்யும் சக்தி அன்பேயாகும். அன்பே மனிதனைக் காக்கும் சக்தியும் உயர்த்தும் சக்தியும் ஆகும். நம்மையும் அறியாமல் மனித வர்க்கத்திலுள்ள இந்த ஒப்புரவு வேலை செய்து வருகிறது. மனித ஜாதி உயிருடன் இருப்பதே, பிரித்து விலக்கும் வேகங்களைக் காட்டிலும், ஒன்று சேர்க்கும் அன்பு வேகமே அதிக சக்தி வாய்ந்தது என்பதற்கு அத்தாட்சியாகும்.

[யங் இந்தியா 12—11—31]

வாழ்க்கைக்கு மந்திரம் அன்பு அல்லது அகிம்சை. இல்லாவிடில் கட்டாயமாக யுத்தங்கள் வந்துகொண்டேயிருக்கும். ஒரு யுத்தத்துக்கு மேல் அடுத்த யுத்தத்தின் கோரம் அதிகரித்துக் கொண்டே போகும்.

[ஹரிஜன் 28—9—36]

நமது இலங்கைக் கடிதம்

# தமிழ்த் தலைவர்களின் ஐக்கிய முன்னணி

ரஜனி

—கொழும்பு, ஜன, 22

அடுத்த பிப்ரவரி மாதம் நடக்க விருக்கும் சர்க்கார் கட்சி வருடாந்திர மகாநாட்டு நிகழ்ச்சி நிரலைத் தயாரிப்பதற்காக நியமிக்கப்பட்ட விசேஷக் கமிட்டிக் கூட்டம் செய்த ஒரு தீர்மானமே இப்போது இலங்கையில் ஏற்பட்டுள்ள நெருக்கடிக்கு முக்கிய காரணமாகும். சிங்களத்தை மட்டும் ராஜாங்க பாஷையாக்கும் தீர்மானத்தை வருடாந்திர மகாநாட்டில் விவாதிக்க அனுமதிக்கக்கூடாது என்று தமிழ் பேசும் இருபத்தைந்து லட்சம் மக்களின் சார்பாக ஸ்ரீ நடேசன் மேற்படி கமிட்டியிடம் உருக்கமாகக் கேட்டுக் கொண்டார். இதோடு சிறுபான்மை வகுப்பினரின் உரிமைகள் வருங்காலத்தில் ஆக்ரமிக்கப்படாமலிருப்பதை உறுதிப்படுத்துவதற்காக இலங்கை அரசியல் அமைப்புத் திட்டத்தில் சிறுபான்மையோர் உரிமை சாஸனம் ஒன்றைச் சேர்க்க வேண்டுமென்றும் ஸ்ரீ நடேசன் கோரினார். இவ்விரண்டு கோரிக்கைகளையும் விசேஷக் கமிட்டி நிராகரித்து விட்டதோடு சிங்களத்தை மட்டுமே ராஜாங்க பாஷையாக்குவதென்றும் அதற்குத் தேவையான நடவடிக்கைகளை உடனே எடுப்பதென்றும் கொண்டுவரப்பட்ட தீர்மானத்தை வருடாந்திர மகாநாட்டுக்குச் சமர்ப்பிப்பதென்றும் முடிவு செய்தது.

இதற்கு அடுத்த நாள் பிரதம மந்திரி ஸர் ஜான் கொத்தலாவல தலைமையில் சர்க்கார் கட்சி காரியக் கமிட்டியின் கூட்டம் நடந்த பொழுது அதிலும் மந்திரி ஸ்ரீ நடேசன் ஒரு கடைசி முயற்சி செய்து பார்த்தார். சிங்களத்தை மட்டுமே ராஜாங்க பாஷையாக்குவதென்ற திட்டத்தைக் கைவிடுமாறு அவர் சாத்தியமான வரையில் முறையிட்டார். ஆனால் பிரதம மந்திரியோ அல்லது காரியக் கமிட்டியோ இந்த வேண்டுகோளுக்குச் செவி சாய்ப்பதாயில்லை. இந்த நிலைமையில் மானமுள்ள தமிழர்கள் யாரும் இன்றைய சர்க்காருடன் ஒத்துழைப்பது சாத்தியமில்லையென்று சொல்லி திரு எஸ். நடேசனும் மற்றும் ஆறு தமிழ் எம். பி.க்களும் கூட்டமாகச் சர்க்கார் கட்சியிலிருந்து இவ்வாரம் ராஜிநாமாச் செய்துவிட்டனர். திருவாளர்கள் எஸ். எம். ராஜமாணிக்கம், கே. கதிர்காமர், பெர்ஸா, முகம்மதலி, வி. குமாரசாமி, ஏ. எல். தம்பி அய்யா ஆகியவர்களே ராஜிநாமாச் செய்த மற்ற ஆறு தலைவர்களாவர். உதவி வெளிநாட்டிலாகா மந்திரியான ஸ்ரீ வி. நல்லையா சுகவீனமாயிருக்கிறார். ஓரிரண்டு தினங்களில் தாமும் ராஜிநாமாச் செய்துவிடப் போவதாக அவர் அறிவித்திருக்கிறார்.

அடுத்த பொதுத் தேர்தலுக்குக் கட்டுப்பாட்டுடன் நடந்து கொள்ளத் தமிழ்த் தலைவர்கள் தங்களுக்குள் ஒரு ஐக்கிய முன்னணியை ஏற்படுத்திக் கொண்டிருக்கிறார்கள். மூலைக்கு ஒருவராக வசித்துக் கொண்டிருந்த தமிழ்த் தலைவர்கள் ஒற்றுமைப்பட்டிருப்பது இலங்கைத் தமிழர்களின் சரித்திரத்தில் இதுவே முதன் முறையாகும்.

கைத் தொழில் மந்திரி ஸர் கந்தையா வைத்தியநாதன் ஐக்கிய தேசியக் கட்சியில் ஒருநாளும் சேர்ந்திருந்ததில்லை. ஆகையால் மற்றவர்களைப் போல அந்தக் கட்சியிலிருந்து ராஜிநாமாச் செய்ய வேண்டிய நிலைமை தமக்கு ஏற்படவில்லையென்றும் மந்திரி பதவியைத் தற்சமயம் ராஜிநாமாச் செய்யப்போவதில்லையென்றும் அறிவித்திருக்கிறார். "தமிழர் நலன்களுக்காக நான் தொடர்ந்து போராடி வருவேன். மந்திரி பதவியை ராஜிநாமாச் செய்யும் வரையில் அந்தப் பதவிக்குரிய சம்பளத்தைத் தர்ம ஸ்தாபனங்களுக்குக் கொடுப்பேன்" என்று ஸர் கந்தையா வைத்தியநாதன் அறிவித்திருக்கிறார்.

# இப்பொழுது நடைபெறுகிறது

சென்னை : அசோக் - சன்
முருகன் - நூர்ஜஹான்
கபாலி & பிரைட்டன்

மதுரை - சென்ட்ரல்

மற்றும் தமிழ்நாடெங்கும்

○★○

தர்மம் வெல்லும்
அதர்மம் தோற்கும்
என்பதை -
விளக்கும்

ஸ்ரீ கல்பனா பிக்சர்ஸின்

# நானே ராஜா

கதை, வசனம்...... கவிஞர் கண்ணதாசன் • டைரக்ஷன்...... இ.அப்பாராவ் பி.வி.நாராயணன் • தயாரிப்பு... R.R.சந்திரன் • ஸ்டுடியோ... வாஹினி

# வட இந்திய யாத்திரை 27

சென்ற ஆண்டு ஜூன் மாதம் 24ம் தேதி பஞ்சாபில் உள்ள பட்டலாவுக்குச் சென்றிருந்தோம். அங்கிருந்து அதைச் சுற்றியிருக்கும் பல கிராமங்களுக்குச் சென்றோம்.

அங்கெல்லாம் இதுவரையில் நாங்கள் காணாத ஒரு அதிசயக் காட்சியைக் கண்டோம். கிராம மக்கள் எல்லாரும் மெதுவாக ஒரு பாட்டை முணுமுணுத்துக் கொண்டே பல விதமான வேலைகளில் ஈடுபட்டிருந்தனர். வீதி பெருக்குகின்றனர். புத்தம்புது சாலைகள் போடுகின்றனர். மரங்கள் நடுகின்றனர். மாடுகளையும் கோழிகளையும் நவீன முறையில் வளர்த்து வருகின்றனர். பாலர்கள், பெரியவர்கள் எல்லாருக்கும் பள்ளிகள் நடத்தி வருகின்றனர். இந்தத் தொண்டில் ஈடுபட்டுக் கொண்டிருக்கும் போதுதான் அவர்கள் வாய் ஏதோ ஒரு பாட்டை முணு முணுத்துக் கொண்டே இருக்கிறது. அந்தப் பாட்டு என்ன பாட்டு என்பதை முழுவதும் புரிந்துகொள்ள முடியவில்லை. ஆனால் ஒவ்வொரு வரியாகப் பாடி முடித்தவுடன் "புதிய பஞ்சாபை அமைப்போம்!" என்ற பல்லவியை அவர்கள் மிகுந்த உற்சாகமாகச் சொல்கின்றனர்.

உழவர்கள் வயல்களில் உழும்போதும் இந்தப் பாட்டைத்தான் பாடுகிறார்கள். வயது சென்ற பெண்மணிகள் ராட்டைச் சுற்றும் போதும், ராட்டையின் சுருதிக்கு ஏற்ப, "புதிய பஞ்சாபை அமைப்போம்!" என்ற பல்லவியைத்தான் பாடிக் கொண்டிருக்கிறார்கள்.

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து நாற்பத்தேழாம் ஆண்டு ஆகஸ்டு மாதம் பதினைந்தாம் தேதி பாரதம் சுதந்திரம் பெற்றதல்லவா! இருநூறு ஆண்டுகள் அடிமை வாழ்வில் உழன்ற நம் தேசம் சுதந்திரம் பெற்ற திருநாளை ஆனந்தத் திருநாளாகக் கொண்டாடினோம் அல்லவா! அவ்விதம் கொண்டாடும் பாக்கியம் இந்தப் பஞ்சாப் மக்களுக்குக் கிடைக்க வில்லையாம். அப்பொழுதெல்லாம் இங்கு மதத்துவேஷம் காரணமாக மக்கள் ஒருவரை ஒருவர் வெட்டிக் கொண்டும் குத்திக் கொண்டும் மடிந்தார்கள். உரத்துப் பேசத் துணிவற்றுப் பலர் மெல்லிய குரலில் முனகிக் கொண்டிருந்தார்கள். கிராமங்கள் அமைதி இழந்து தவித்துக் கொண்டிருந்தன. இவ்வாறு இருந்த பஞ்சாப் கிராமங்கள் இப்பொழுது அடியோடு மாறிவிட்டன. தேசமெங்கும் சுதந்திரத் திருநாளையும், குடியரசுத் திருநாளையும் அந்த அந்தத் தினங்களில் மட்டும் கொண்டாடி மகிழ்ந்தனர். மகிழ்ந்து வருகின்றனர். ஆனால் பஞ்சாப் கிராம மக்கள் இப்பொழுது தினம் தினம் சுதந்திரத் திருநாளைக் கொண்டாடி மகிழ்ந்து வருகிறார்கள்.

அவர்கள் அவ்வாறு கொண்டாடி மகிழ்வதற்கு இந்திய சர்க்காரும் ராஜ்யசர்க்காரும் பல வகையான சமூகநலத் திட்டங்கள் வகுத்துக் கொடுத்திருக்கிறார்கள். அந்தத் திட்டங்களை அங்குள்ள சர்க்கார் அதிகாரிகளும், கிராம மக்களும் சேர்ந்து நல்ல முறையில் செய்துவரும் காட்சியைத்தான் நேரில் பார்த்து மகிழ்ந்தோம்.

இவ்வாறு சுதந்திரம் பெற்ற பின்னர் பஞ்சாபின் பல கிராமங்கள் ஆனந்த கிராமமாக மாறி யிருக்கும் அற்புதத்தின் மகிமையை நன்றாக உணர வேண்டுமானால், அதற்கு முன்னால், இப்பொழுதும் கூட அங்கு இன்னும் பல கிராமங்களின் நிலைமையைப் பற்றிச் சிறிது தெரிந்து கொள்ள வேண்டும்.

## பட்டலா தாலூகா

இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் இடையில் பருஷ்னி என்று வேதங்கள் புகழும் ரவி நதி பஞ்சாபின் வடமேற்குப் பகுதியில் துள்ளிக் குதித்துக் கொண்டு ஓடு



புதிய

கிறது. அதன் அழகைப் பார்த்துக் கொண்டே இருக்கலாம். அப்படி என்ன அழகு ஆற்றில் இருக்கப்போகிறது என்று கேட்கலாம். ரவி நதியை ஒருதரம் நேரில் பார்த்தால் அவ்வாறு கேட்கத் தோன்றாது. அந்த நதி ஓடும்போது எதையோ பாடிக்கொண்டே ஓடுகிறது. என்ன பாடுகிறது என்று சற்றுக் கூர்ந்து கேட்டால், நாம் எப்பொழுதோ எங்கேயோ கேட்ட பாட்டைப் போல இருக்கிறதே என்பதைத் தெரிந்து கொள்வோம். ஆம்; பஞ்சாபின் கிராமங்களில் கிராம மக்கள் உற்சாகமாகப் பாடிக் கொண்டிருந்த அதே பாட்டைத்தான்

பாடிக் கொண்டிருக்கிறது. "புதிய பஞ்சாபை அமைப்போம்!" "புதிய பஞ்சாபை அமைப்போம்!" என்ற பல்லவியைப் பாடிக்கொண்டு ஓடுவதாகத் தெரிகிறது. இந்த நதியிலிருந்து சுமார் பத்து மைல்களுக்கு அப்பால் அமிருதசரஸுக்கும் — கிருதாஸ்பூருக்கும் மத்தியில் பட்டலா என்னும் நகரம் இருக்கிறது.

பாரதம் சுதந்திரம் பெற்ற பிறகு, இந்தியா பாகிஸ்தான் பிரிவினைக்குப் பின்னர் இந்த நகரத்தின் உருவமே மாறிவிட்டது. ஒருத்தர் இருந்த இடத்தில் நாலுபேர் இருக்கிறார்கள். இருபத்தைந்து பேர் இருந்த இடத்தில் நூறு பேர் இருக்கிறார்கள். அதாவது ஜனத்தொகை ஒன்றுக்கு நான்கு மடங்கு அதிகமாகி விட்டது.

நல்ல தொழில் நிலையங்கள் இருக்கின்றன. இரும்பைக் காய்ச்சி உருக்கி அற்புதமான சாமான்கள் செய்யும் சிறு சிறு தொழிற்சாலைகள் ஏராளமாக இருக்கின்றன. மக்கள் தங்கள் உழைப்புக்குத் துணையாக அங்குள்ள மிருகங்களை எல்லாம் உபயோகப்படுத்திக் கொள்கின்றனர். பட்டலா நகரத்துச் சாலைகளில் உழைப்பாளி மக்கள் கூட்டம் கூட்டமாகச் செல்வது போலவே குதிரை, கழுதை, கோவேறு கழுதை முதலிய பிராணிகளும் கூட்டம் கூட்டமாகச் செல்கின்றன.

நம் பக்கங்களில் லாரிகளிலும், இரட்டைமாட்டு வண்டிகளிலும் செங்கல், மண் முதலியவைகளை



# பஞ்சாப்

பகீரதன்

ஏற்றிச் செல்கிறோ மல்லவா! அதேபோல, அங்கு குதிரை, கழுதை, கோவேறு கழுதை முதலிய பிராணிகளின் முதுகில் செங்கல், மண் இன்னும் பலவித சாமான்களையும் ஏற்றி, ஒரு இடத்திலிருந்து இன்னொரு இடத்துக்கு அனுப்பி வைக்கிறார்கள். அவ்வாறு சாமான்களைச் சுமந்து செல்லும் பிராணிகளைத்தான் பட்டலா நகரத்துச் சாலைகளில் கூட்டம் கூட்டமாகக் காண முடிகிறது.

தமிழ் நாட்டு வீதிகளில் காண முடியாத இன்னொரு காட்சியையும் காண முடிகிறது. பெரிய பெரிய இரும்புக் கொப்பரைகளில் தளதள வென்று கொதித்துத் தண்ணீராக உருகிய இரும்புக் குழம்பைச் சுமந்து செல்லும் காட்சி தென்படுகிறது. எங்கு பார்த்தாலும் இயந்திரங்களின் பகுதிகள் உற்பத்தி செய்யும் பட்டறைகள், அதாவது சிறு சிறு இரும்புத் தொழிற்சாலைகள் இருக்கின்றன. அதில் எறும்பு போல மக்கள் சுறுசுறுப்பாக வேலை செய்து கொண்டிருக்கிறார்கள்.

பாகிஸ்தான் பிரிவினைக்கு முன்னால் பட்டலாவில் முஸ்லிம் ஜனத்தொகை அதிகம். முஸ்லிம் மக்கள் இந்தத் தொழில்களைச் செய்து கொண்டிருந்தனர். இப்பொழுது பட்டலாவில் முஸ்லிம்களே இல்லை என்று சொல்லி விடலாம். இரும்பைக் காய்ச்சி உருக்கி இயந்திரங்கள் செய்யும் வேலைகளை பஞ்சாபியர்களும் சீக்கியர்களும்தான் செய்து வருகிறார்கள். அவர்கள் எல்லாரும் பெரும்பாலும் பாகிஸ்தானில் இருந்து ஓடி வந்த அகதிகள்தான்.

பட்டலா நகரத்திலிருந்து சற்றுக் கிழக்கு நோக்கிச் சென்றால் வேதங்கள் தெய்வமாகக் கொண்டாடும் இன்னொரு நதியான விபாசா நதி பியாஸ் என்ற பெயரில் ஆடி அசைந்து ஓடி வரும் அழகைப் பார்க்கலாம். பியாஸ் நதியைப் பார்த்தால் சாதாரண ஆற்றைப் பார்ப்பது போல் இல்லை. அப்படியே மனத்தைக் கொள்ளை கொள்ளும் ஏதோ ஒரு அபூர்வ சக்தி அந்த நதிக்கு இருக்கிறது. அதனால்தானோ என்னவோ நமது முன்னோர்கள் இதைத் தெய்வமாகப் பாவித்துப் போற்றிப் புகழ்ந்து வணங்கினார்கள் போலும்.

ரவி நதிக்கும் பியாஸ் நதிக்கும் இடையில் பரந்து விரிந்து கிடக்கும் பிரதேசம் தான் பட்டலா தாலுக்கா. மூன்று லட்சத்து நாற்பதாயிரம் மக்கள் இப்பொழுது இந்தத் தாலுகாவில் வசித்து வருகிறார்கள். இந்தத் தாலுகாவில் இருக்கும் கிராம மக்களின் முக்கியமான தொழில் விவசாயம்தான்.

இங்கு மழை அதிகம் இல்லை; ஆண்டுக்கு இருபத்தைந்து அங்குலம்தான் மழை பெய்கிறது. அதனால் ஆறாயிரம் குழாய்க் கிணறுகள் இறக்கி விவசாயத்துக்கு வேண்டிய தண்ணீரைப் பெற்று வருகின்றனர். விவசாயத்துக்குத் தகுதியாக மூன்று லட்சம் ஏக்கர் நிலம் இருக்கிறது. ஆனால் மூன்று லட்சம் ஏக்கர் நிலத்தையும் இன்னும் விவசாயம் செய்வதற்கு மக்கள் உபயோகிக்க வில்லை. இரண்டரை லட்சம் ஏக்கர் நிலத்தில் விவசாயம் நடைபெற்று வருகிறது. பியாஸ் — ரவி நதிகளின் அப்பர் பாரி தோ ஆப் கால்வாய் இந்தத் தாலுகாவில் ஓடுகிறது. கால்வாயில் நிறையத் தண்ணீர் ஓடினாலும் அதை முழுமையுமாகப் பட்டலா தாலுகா மக்கள் உபயோகிக்கவில்லை. அந்தக் கால்வாயின் தண்ணீரில் பத்தில் ஒரு பங்கைத்தான் உபயோகித்து வருகிறார்கள். காரணம் இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் இருந்து வரும் கால்வாய்த் தண்ணீர்த் தகராறு தான். அது இன்னும் ஒரு முடிவுக்கு வராமல் இருப்பதால் கால்வாய்த் தண்ணீர் தங்கள் நிலங்களின் மீது ஓடியும் அதன் பலனை அனுபவிக்க முடியாமல் பட்டலா தாலுகா மக்கள் இருந்து வருகின்றனர்.

நெல், கரும்பு, பயறு முதலியவைகள் முக்கியமான விளை பொருள்கள். கோதுமை, கடலை முதலியவைகளையும் பயிர் செய்கிறார்கள்.

## பட்டலா கிராமங்கள்

மழைக் காலத்தில் அங்கெல்லாம் ஒரே வெள்ளக் காடுதான். மழை என்னவோ அதிகம் பெய்வதில்லை. ஆனாலும் ஒரே வெள்ளம்தான். காரணம் மழைத் தண்ணீர் வடிய மார்க்கமில்லை. இந்தப் பிரதேசத்தில் வடிகால்கள் அடியோடு இல்லை என்றே சொல்லலாம்.

வடிகால்கள் இல்லை என்றதும் ஒரு விஷயம் நினைவுக்கு வருகிறது. தென்னாட்டில் தென் கன்னடம் முதலிய இடங்களில் வருஷம் தோறும் ஏராளமாக மழை பொழிகிறது. மழை யென்றால் எப்படி யிருக்கும் தெரியுமா! வானமே பொத்துக் கொண்டு அருவியாக விழுவதுபோல மழை பொழியும். ஆனால் மழை பெய்து ஒருசில மணி நேரத்துக்குள் மழைத் தண்ணீர் எல்லாம் யாருக்கும் பயன் பெறாமல் அரபிக் கடலில் போய்ச் சேர்ந்து விடும். இந்தத் தண்ணீரைத் தேக்கி வைப்பதற்கு இன்ஜினியர்கள் முயன்று திட்டங்கள் வகுக்க வேண்டும். அதே போல வடிகால் இல்லாத இடங்களில் தண்ணீர் வடிவதற்கும் வேண்டிய வழி செய்ய வேண்டும்.

நாட்டில் ஒருபக்கத்தில் பெய்யும் மழையைத் தேக்கி வைக்க வழியில்லை. இன்னொரு இடத்தில் வடிகால் இல்லை. இதெல்லாம் இருநூறு ஆண்டு அன்னிய ஆட்சியின் சின்னங்கள்.

விரைவில் இவைகள் நிவர்த்தியாவதற்கு வேண்டிய காரியங்கள் நடைபெறுமென்று எதிர்பார்க்கலாம். அதற்கான சூழ்நிலை நாட்டில் உருவாகி வருகிறது. ஆனால் அந்தச் சூழ்நிலை சூழ்நிலையாகவே இல்லாமல் காரியத்திலும் உருவாகும் நல்ல நாள் என்று வருமோ!

பட்டலா தாலுகாவில் உள்ள கிராமங்களில் பல இடங்களுக்கு நல்ல போக்குவரத்துச் சாலைகள் கிடையாது. சாலைகளே இல்லாமல் எப்படித்தான் அங்குள்ள கிராமங்களில் மக்கள் வாழ்ந்து வந்தார்களோ! (இப்பொழுது பல கிராமங்களுக்குப் புதிய சாலைகள் போட்டிருக்கிறார்கள்.) சாலைகள் இல்லாமலேயா கிராம மக்கள் வாழ்ந்திருப்பார்கள்! இல்லை. ஒரு காலத்தில் இந்தக் கிராமங்களுக் கெல்லாம் சாலைகள் இருந்தனவாம். அதாவது அக்பர் சக்கரவர்த்தி அரசாண்ட காலத்தில் இங்கெல்லாம் போக்குவரத்துக்குச் சௌகரியமான நல்ல சாலைகள் இருந்ததாம். காலப் போக்கில் சாலைகளை ஒட்டி நிலங்கள் வைத்திருந்த விவசாயிகள் சாலைகளையும் தங்கள் நிலங்களுடன் வெட்டிச் சேர்த்துக் கொண்டனர். தங்கள் நிலம் விரிவடைந்ததைக் கண்டு

நீங்கள் இதுவரை அருந்தாத

# மிகச்சிறந்த காப்பி...

...ஆயினும் மிகவும் நயமான விலையில்!









ஸ்டேன்ஸ் சிகப்பு லேபிள் சுத்தமான காப்பி உங்களுக்கேற்ற சிறந்த நறுமணமுள்ள பலமான பானத்தை அளிப்பதோடு, அதிக டம்ளர்கள் காப்பியையும் அளிக்கிறது.

நீங்கள் காப்பி வாங்கும்பொழுது ஸ்டேன்ஸ் என்ற பெயரைப் பார்த்து வாங்குங்கள். அது உங்களுக்கு உயர்ந்த ரகத்திற்கு உத்திரவாதம். இதனுடைய நறுமணம் சிறிதும் குன்றாமல், காற்றுப் புகாத ½, 1, 3. 7, 14 & 20 ராத்தல் டின்களில் பாக் செய்யப்படுகின்றன. இன்றே ஒரு டின் வாங்குங்கள்.

**தி யுனைடெட் காப்பி சப்ளை கம்பெனி லிட்.**
**கோயம்புத்தூர், தென் இந்தியா**




# Stanes

**ஸ்டேன்ஸ் சிகப்பு லேபிள்**
**சுத்தமான காப்பி**

எல்லோரும் வாங்கக்கூடிய
நல்ல காப்பி

*கோவில்பட்டியில் டிஸ்ட்ரிப்யூட்டர்கள்:*
மிஸ்டர் ஏ. எஸ். லக்ஷ்மண ரெட்டியார், ஜெனரல் மெர்ச்சண்ட்ஸ், கோவில்பட்டி

*திருவாரூர் ஏஜண்டு:*
மிஸ்டர் எஸ். கே. தக்ஷிணாமூர்த்தி முதலியார், ஜெனரல் மெர்ச்சண்ட்ஸ், விஜயபுரம் போஸ்ட்

மகிழ்ந்தனர். ஆனால் சாலைகள் இல்லாமல் போக்குவரத்து எப்படி நடைபெறும் என்று அவர்கள் யோசிக்கவில்லை. அதனால் அவர்கள் நிலத்தில் விளைந்த பொருள்கள் கிராமங்களை விட்டு வெளியில் எடுத்துச் செல்ல வழியில்லாமல் போய் விட்டது. வியாபாரம் முடங்கி விட்டது. இதனால் பணக்காரர்களும், ஏழைகளும் மிகவும் கஷ்டப் பட்டனர். மத்தியதர வகுப்பினர் மட்டும் சற்றுச் சுகமடைந்தனர்.

கிராமங்களில் சுகாதாரம் என்பது மருந்துக்குக் கூட கிடையாது. எழுத்தறிவு பெற்ற மக்களைக் கிராமங்களில் காண முடியாது.

கிராமங்களில் நடந்து வரும் அராஜகத்தைக் கேட்பதற்கே கஷ்டமாக இருக்கிறது. பஞ்சாயில் உள்ள ஜமீந்தார்கள், பெரிய மிராசுதார்கள், வட்டி வாங்கிப் பிழைக்கும் கூட்டத்தினர் மூவருமாகக் கிராமங்களைப் பிழிந்து வருகின்றனர். அதனால் கிராமங்களில் தரித்திரம் தாண்டவமாடுகிறது. தரித்திரம் காரணமாக மக்கள் அமைதி குலைந்து இருக்கின்றனர். அராஜகம் தலை விரித்து நிற்கிறது.

கிராமங்களில் பல கட்சிகள். அதனால் அடிதடி வழக்குகள். ஜாட்கள் என்று சொல்லும் விவசாயத்தில் ஈடுபட்டிருக்கும் இந்துக்களும் சீக்கியர்களும் தங்கள் சுயநலம் ஒன்றையே குறியாகக் கொண்டு வாழ்ந்து வருகிறார்கள். சுய காரியத்துக்காக எந்தப் படுமோசமான காரியங்களையும் அஞ்சாமல் செய்து வரும் அசகாய சூரர்கள். இவர்களுடைய கொடுமைகளால் கிராமமக்கள் வாழ்வதற்குப் படும் கஷ்டங்கள் கற்பனை செய்ய முடியாது.

ஏழுபேருக்கு ஒரு ஏக்கர் நிலம்தான் இருக்கிறது. இருக்கும் சொற்ப நிலங்களும் ஒரே இடத்தில் சேர்ந்தாற்போல் இருப்பதில்லை. பல இடங்களில் துண்டு துண்டாகப் பிரிந்து கிடக்கிறது. இதனால் ஏற்படும் தொல்லைகளை விவசாயத் துறையில் ஈடுபட்டிருப்பவர்கள் நன்றாக அறிவார்கள். இவ்வாறு கஷ்ட வாழ்க்கையில் நல்ல மன உணர்ச்சியை இழந்த மக்கள் பயங்கரவாதிகளாக, அடிதடி சண்டைகளில் ஈடுபட்டிருப்பதில் என்ன அதிசயம்!

இந்த நிலைமையை மாற்றுவதற்குச் சுதந்திர சர்க்கார் எத்தனையோ காரியங்களைச் செய்து வருகிறார்கள். சில இடங்களில் நிலைமை மாறியும் இருக்கிறது. மாறியிருக்கும் கிராமங்களைத்தான் நாங்கள் போய்ப் பார்த்தோம். ஆனால் இன்னும் பல கிராமங்கள் மாறவில்லை என்று கேள்விப் பட்டோம்.

இந்தியா பாகிஸ்தான் எல்லையில் இருக்கும் இந்தக் கிராமங்களில் அமைதி நிலவினால்தான் இரு நாடுகளுக்கும் நன்மை. கிராமங்களில் அமைதியை நிலை நாட்டுவதற்காக, நல்ல சாலைகளும், சுகாதார வசதியும், கல்வி அபிவிருத்தியும் ஏற்படுவதற்காக இந்திய சர்க்காரும் - ராஜ்ய சர்க்காரும் சமூகநல ஸ்தாபனங்கள் நிறுவித் தொண்டாற்றி வருகின்றனர். சுமார் ஆறு லட்சம் ரூபாய் செலவில் சமூகநலத் திட்ட ஸ்தாபனம் ஒன்றை பட்டலாவில் அமைத்திருக்கிறார்கள். அந்த ஸ்தாபனம் ஆற்றிவரும் அரிய தொண்டைக் காணத்தான் நாங்கள் பட்டலாவுக்குச் சென்றோம்.

### சமூக நல ஸ்தாபனம்

பட்டலா போய் இறங்கியவுடனேயே சமூக நல ஸ்தாபனத்தார் எங்களைத் தங்கள் விருந்தினராக ஏற்றுக் கொண்டனர். சமூக நல ஸ்தாபனத்தார் ஏற்பாடு செய்திருந்த காரில் ஏறிக் கொண்டு ஜில்லா போர்டு விருந்தினர் விடுதிக்கு வந்து சேர்ந்தோம். காலை நேரம். மணி ஒன்பதரைதான் ஆகி யிருந்தது. ஆனாலும் வெயிலின் வேகம் தாங்க முடியாமல் இருந்தது. அப்பொழுதே அனல் காற்று வீச ஆரம்பித்து விட்டது.

"காலையிலேயே இப்படி வெயில் கொளுத்துகிறதே!" என்றேன்.

"சமூக நல ஸ்தாபனத்தின் மூலம் நாங்கள் கிராமங்களில் செய்திருக்கும் தொண்டைப் பார்த்தால் வெயிலின் வேகம் அப்படி ஒன்றும் தெரியாது" என்றார் சமூக நல அதிகாரி.

"உங்களை எல்லாம் இலேசில் விட்டு விடப் போவதில்லை. எங்கள் பகுதியில் முன்னேறியிருக்கும் கிராமங்களுக் கெல்லாம் அழைத்துச் சென்று காட்டப் போகிறோம். விரைவில் தயாராக இருங்கள்" என்றார் அதைத் தொடர்ந்து இன்னொரு அதிகாரி.

"அதற்குத்தானே வந்திருக்கிறோம். எங்களை அந்தக் கிராமங்களுக்கெல்லாம் அழைத்துச் செல்லா விட்டால் உங்களை இலேசில் விடமாட்டோம்" என்றார் எங்களுடன் வந்த இன்னொரு பத்திரிகையாளர்.

"அப்படியானால் சீக்கிரம் பிரயாணத்துக்குத் தயாராகுங்கள்" என்றார்கள்.

ரயில் பிரயாணக் களைப்புத் தீருவதற்குள்ளாகவே சமூக நல ஸ்தாபனத்தின் தலைமைக் காரியாலயத்துக்குச் சென்றோம்.

பஞ்சாபில் மத்திய சர்க்கார் நடத்தும் சமூக நல ஸ்தாபனம் இன்னொன்றும் இருக்கிறது. அது விலோகேர் என்னும் இடத்தில் இருக்கிறது. இப்பொழுது நாம் பார்க்கப் போவது மர்லேன்பூ காலனியில் இருக்கும் பட்டலா சமூகநல ஸ்தாபனம். மர்லேன்பூ காலனியில் நூற்றைம்பது வீடுகள் இருக்கின்றன. அவைகள் வரிசை வரிசையாக அச்சில் வார்த்து எடுத்தது போல அமைந்து இருக்கின்றன. பட்டலா நகரிலிருந்து சுமார் ஒன்றரை மைல்களுக்கு அப்பால் இருந்தாலும் எல்லா விதமான வசதிகளையும் அந்தக் காலனியில் செய்திருக்கிறார்கள். வீடுகளில் குளிக்கும் அறை, பிளஷ் அவுட் என்னும் சுகாதார வசதி, தண்ணீர் வசதி முதலியவைகளுடன் சமையல் அறையும் வேறு இரண்டு அறைகளும் இருக்கின்றன. இந்த வீடுகளைக் கட்டுவதற்கு, ஒரு வீட்டுக்கு இரண்டாயிரத்து முந்நூறு ரூபாய்தான் செலவாயிற்றும். எப்படித்தான் இந்தக் குறைந்த செலவில் இவ்வளவு அருமையான வீடுகளைக் கட்டினார்களோ! அதே போன்ற வீடுகளைச் சென்னையில் கட்டுவதற்குக் குறைந்தது பத்தாயிரம் ரூபாயாவது ஆகும். அங்கு குறைந்த செலவில் வீடு கட்ட முடிவதும், சென்னையில் கட்ட முடியாமல் இருப்பதிலும் உள்ள அதிசயத்தைப் புரிந்து கொள்ள முடிந்தாலும் அதிசயம் என்னவோ அதிசயம்தான்!

பாகிஸ்தானிலிருந்து வரும் அகதிகள் குடியேறுவதற்காக இந்த மர்லேன்பூ காலனியைக் கட்டியிருக்கிறார்கள். இவ்வளவு வசதிகளுடன் வீடுகள் கட்டிக் கொடுத்தாலும் அகதிகள் என்னவோ அதில் யாரும் குடியேற வில்லை. காரணம், உழைத்து ஜீவனம் செய்யும் அகதிகளுக்கு நகரத்தில் இருந்து காலனி அதிக தூரம் இருந்தது. பணம் படைத்த அகதிகள் அந்த இடத்தை விரும்ப வில்லை. அவர்களுக்குத்தான் டில்லி போன்ற வசதியான நகரங்கள் இருக்கின்றனவே!

ஆகவே மர்லேன்பூ காலனியை ஆயிரத்துத் தொள்ளாயிரத்து ஐம்பத்திரண்டாம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 12உ முதல் சமூகநல ஸ்தாபன ஊழியர்களின் பயிற்சி முகாமாக மாற்றினர். அதுவே அந்த வட்டாரத்துச் சமூக நல ஸ்தாபனத்தின் தலைமைக் காரியாலயமாகவும் இப்பொழுது இயங்கி வருகிறது.

இங்கு கிராம அபிவிருத்திக்கான பல்வேறு முறைகளையும், கிராம மக்களிடம் பழகும் விதத்தையும் சமூக நல ஊழியர்களுக்குச் சொல்லிக் கொடுக்கின்றனர்.

புதிய முறையில் விவசாயம் செய்வது, மிருக வைத்தியம், சமூக சேவை, பஞ்சாயத்து முறை, கூட்டுறவு முறை, சாலைகள் அமைத்தல், வீடுகள் கட்டுதல், பொதுஜன சுகாதாரம் முதலிய விஷயங்களை ஊழியர்களுக்குச் சொல்லிக் கொடுப்பதற்காக அந்தந்தத் துறையில் பிரசித்திபெற்ற பதினொரு நிபுணர்கள் இருக்கிறார்கள். நாங்கள் சென்றபோது சமூக ஊழியர்களின் ஆறாவது குழுவினர் பயிற்சி பெற்று வந்தனர். இந்தக் குழுவில் எழுபத்தேழு இளை

ஞர்கள் உற்சாகமாக ஈடுபட்டிருந்தனர். இவர்களைப் பஞ்சாப் ராஜ்யத்தின் விவசாய இலாகா அனுப்பி வைத்திருந்ததாக அறிந்தோம்.

கிராம மக்களுக்கு நமது நாட்டின்மீதும் நமது கொடியின் மீதும் பக்தி ஏற்பட்டால் தானே நாட்டை நேசித்து நாட்டு முன்னேற்றத்தில் உற்சாகமாக ஈடுபடுவார்கள். அதற்கு அடிப்படையாகக் கிராம மக்கள் மத்தியில் வேலை செய்யும் ஊழியர்களுக்கு அந்த பக்தி ஏற்படவேண்டு மல்லவா? அதற்கு வேண்டிய பயிற்சியும் அவர்களுக்கு அளிக்கப்படுகின்றன. நமது நாட்டின் உண்மைச் சரித்திரங்களை அவர்கள் கற்றுத் தெரிந்து கொள்கின்றனர். காலையிலும் மாலையிலும் அந்தக் காலனியின் மத்தியில் உள்ள கொடிக் கம்பத்தில் தேசியக் கொடியை ஏற்றிப் பறக்க விட்டு, வரிசையாக நின்று வணங்குகின்றனர்.

காலனிக்கு மத்தியில் ஓங்கிவளர்ந்த கம்பத்தின் உச்சியில் நமது தாயின் மணிக் கொடி பட்டொளி வீசி ஆடிப் பறக்கிறது. அதன் மத்தியில் அசோக சக்கரம் சுழன்று கொண்டிருக்கும் அழகை அனுபவித்துக் கொண்டு சமூகநல ஊழியர்கள் கம்பத்தின் கீழ் வரிசை வரிசையாக நின்று வணங்கும் காட்சி கண் கொள்ளாக் காட்சியாக இருந்தது.

பஞ்ச நதி தீரத்தில் பிறந்த இளைஞர்கள் தேசியக் கொடிக்கு வணக்கம் செலுத்தும் போது, மக்களின் சேவைக்கும், கிராம முன்னேற்றப் பணிக்கும் தங்களைத் தியாகம் செய்து கொள்ளத் தங்களைத் தயார் செய்துகொள்ளும் பாடலைப் பாடுகிறார்கள். கடைசியில் தாயின் மணிக்கொடிக்கு வணக்கம் செய்து, "புதிய பஞ்சாபை அமைப்போம்" என்று பிரதிக்ஞை எடுத்துக் கொள்ளும் காட்சியை மறக்க முடியவில்லை. காலையில் கொடி வணக்கம் நடந்த பிறகுதான் அவர்களின் அன்றாட அலுவல்கள் ஆரம்பமாகின்றன.

காலனியை ஒட்டியுள்ள இரண்டரை ஏக்கர் நிலத்தில் நல்ல உரங்கள் போட்டு, தேர்ந்த விதைகளைக் கொண்டு நெல், கோதுமை, கடலை முதலியவைகளைப் பயிரிட்டிருக்கிறார்கள். அவைகள் பச்சைப் பசேல் என்று வளர்ந்திருக்கும் காட்சியைப் பார்த்தபொழுதே "கம்யூனிட்டி புராஜக்ட்" அதாவது சமூக நல ஸ்தாபனத்தின் பணியை நன்கு புரிந்து கொள்ள முடிகிறது. அப்போது பஞ்சாபின் பயங்கரக் கோடை வெயிலின் கொடுமைகூடச் சற்றுத் தணியத்தான் செய்கிறது!

இதைத் தவிர மர்லேன்யூ காலனியை ஒட்டிப் பதினொன்று ஏக்கர் நிலம் இருக்கிறது. இந்த நிலங்களில் புதிய முறையில் விவசாயம் செய்யும் விதத்தைப் பற்றி ஊழியர்களுக்குப் பயிற்சி அளிக்கப்படுகிறது. வெறும் ஏட்டுக் கல்விப் பயிற்சி இல்லை. ஊழியர்கள் நெற்றி வியர்வை நிலத்தில் விழ உழைத்துப் பாடுபட்டுப் பயிலுகிறார்கள். "உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்" என்பதுபோல உற்சாகமாக வேலை செய்கிறார்கள். இதற்கு வேண்டிய விவசாயக் கருவிகள் எல்லாம் இங்கே இருக்கின்றன. இங்கு ஒரு கூட்டுறவுச் சாலையும் இருக்கிறது. அதில் பயிற்சி பெறுகிறார்கள். கூட்டுறவுச் சாலையை எவ்வாறு அமைப்பது, அதன் மூலம் மக்களுக்கு என்னென்ன சௌகர்யங்கள் கிடைக்கும் என்பதை எல்லாம் அனுபவ பூர்வமாகவே உணர்ந்து வருகிறார்கள். வைத்தியப் பயிற்சியும் அவர்களுக்குக் கற்றுக் கொடுக்கப்படுகின்றன. அதற்கு வேண்டிய வைத்திய சாலையும் இங்கு இருக்கிறது. கிராமங்களில் உழவுத் தொழிலில் ஈடுபட்டிருப்பவர்களுக்குக் கால்நடைச் செல்வங்கள் மிக முக்கியமல்லவா! அதைப் பேணி வளர்த்துப் பாதுகாக்கவேண்டும். அவைகளுக்கு நோய் நொடி வந்தால் உடனே வைத்தியம் செய்யத் தெரிந்திருக்க வேண்டுமல்லவா! அதற்காகச் சமூகநல ஊழியர்களுக்கு மிருக வைத்தியப் பயிற்சியும் கொடுக்கப்படுகிறது. அதற்கு வேண்டிய எல்லா வசதிகளுடன் கூடிய மிருக வைத்திய சாலை ஒன்றும் இங்கு இருக்கிறது. ஊழியர்கள் உடற் பயிற்சி பெறும் விளையாட்டுத் திடலும் இருக்கிறது. ஊழியர்கள் பயிற்சிக் காலத்திலேயே சுற்றுப்புறங்களில் உள்ள கிராமங்களுக்குச் சென்று தொண்டாற்றி வருகின்றனர்.

அவர்கள் தொண்டால் பலன் பெற்றிருக்கும் பஞ்சாபின் பல கிராமங்களை அடுத்த இதழில் காணலாம். (தொடரும்)

# படித்துப் பாருங்கள்!

## Madras Information 1956 Annual Number

நாட்டு மக்களுக்குச் சுதந்திரம் கிடைத்துப் பொது மக்களின் க்ஷேம நலன்களில் அக்கறையுள்ள ஜனப் பிரதிநிதிகளின் ஆட்சி ஏற்பட்ட பிறகு, அந்நாட்டு மக்கள் "ராமன் ஆண்டால் என்ன, ராவணன் ஆண்டால் என்ன" என்னும் மனப்பான்மையில் இருக்க முடியாது. சர்க்கார் தங்கள் திட்டங்களை மக்களின் முன் சமர்ப்பித்து அவர்களை நாட்டு முன்னேற்றத்தில் ஈடுபடுத்துவது இன்றியமையாததாகும். அந்த முறையில் சென்னை ராஜ்யத்தின் அலுவல்கள் Madras Information என்னும் பெயரில் மாத சஞ்சிகையாக ஆங்கிலத்தில் வெளியாகிறது. மேற்படி செய்திச் சஞ்சிகையின் வருஷ அநுபந்தம் இப்பொழுது வெளிவந்திருக்கிறது. மழ மழப்பான ஆர்ட்தாளில் பிரசுரமாகியிருக்கும் இந்த அநுபந்தத்தில், நமது ராஜ்ய சர்க்காரின் சுகாதாரத் திட்டம், விவசாய அபிவிருத்தித் திட்டம், பாசன வசதித் திட்டம், சாலை அபிவிருத்தி, கல்வித் திட்டம், கதர் அபிவிருத்தி, குடிசைக் கைத்தொழில், மின்சாரத் திட்டம், ஐந்தாண்டுத் திட்டம் முதலிய எல்லாவற்றையும் பற்றி விரிவாகப் புள்ளி விவரங்களுடன் கூறப்பட்டிருக்கிறது.

மாமல்லபுரம் கடற்கரைக் கோயில், செஞ்சிக் கோட்டை, ரங்கநாதர் ஆலயம், அரிய சிற்பச் சித்திரங்கள், பல அணைக்கட்டுகள், நீர்த் தேக்கங்களின் படங்கள் முதலியவைகளுடன், இவ்வநுபந்தம் வெறும் செய்தித் திரட்டாயிராமல் கலை யம்சத்திலும் சிறந்து விளங்குகிறது.

பிரசுரம்: Director of Information and Publicity, Fort St. George, Madras - 9.
விலை: ரூ. 1—0—0.



# புதையல் ரகசியம்

★

மொழிபெயர்ப்பு :

எஸ். வி. எஸ்.

★

மூன்றொரு காலத்திலே ஒரு குடியானவனும் அவன் மனைவியும் ஒரு ஊரில் வசித்து வந்தார்கள். குடியானவன் மனைவி எப்பொழுது பார்த்தாலும் சளசள என்று யாருடனாகிலும் பேசிக் கொண்டேயிருப்பாள். அவளால் ஒரு ரகசியம்கூட ரகசியமாக வைத்திருக்க முடியாது. ஒரு ரகசியம் அவள் காதில் விழுந்தால் போதும், அடுத்த கணம் ஊர் முழுதும் பரவி விடும்.

ஒரு நாள் குடியானவன் வயற்காட்டுக்குப் போனான். காட்டில் ஏதோ தோண்டிக் கொண்டிருந்த போது, பூமிக்கடியில் புதையல் ஒன்று இருப்பது தெரிந்தது.

அடுத்த கணம் அவனுக்குக் கவலை பற்றிக் கொண்டது. "நான் இப்பொழுது என்ன செய்வேன்? இந்தப் புதையலைப் பற்றிய செய்தி என் மனைவிக்குத் தெரிந்தவுடன் ஊர் முழுவதும் பரப்பி விடுவாளே! விலச்சுவான்தார் காதில் விழுந்தால் அவர் அவ்வளவையும் எடுத்துக் கொண்டு விடுவாரே!" என்று அங்கலாய்த்தான்.

இந்தத் தர்மசங்கடமான நிலையை எப்படிச் சமாளிப்பது என்று யோசித்தான், யோசித்தான்; நீண்ட நேரம் யோசித்தான். கடைசியில் அவனுக்கு ஒரு யோசனை தட்டுப்பட்டது. உடனே புதையலிருந்த குழியை மூடி விட்டு, அதன் மேல் ஓர் அடையாளம் வைத்து விட்டு வீட்டுக்குத் திரும்பினான். வழியில், காலையில் ஆற்றில் வீசி விட்டு வந்த மீன் வலையை எடுத்துப் பார்த்தான். அதில் ஒரு பெரிய மீன் சிக்கித் தத்தளித்துக் கொண்டிருந்தது. அந்த மீனை எடுத்துத் தன் பையில் போட்டுக் கொண்டு மேலே போனான். மீண்டும் வழியில் அவன் காலையில் வைத்து விட்டுப் போன பொறியைப் பார்த்தான். அதில் ஒரு முயல் சிக்கியிருந்தது.

குடியானவன் பொறியிலிருந்து முயலை எடுத்தான். அதில் மீனைப் போட்டான்; மீன் வலையில் முயலைப் போட்டு ஆற்றில் விட்டு வந்தான்.

இந்தக் காரியங்கள் எல்லாம் முடித்துக் கொண்டு அவன் வீடு திரும்பிய போது நன்றாக இருட்டி விட்டிருந்தது. ஆயினும் அவன் மனைவியை அழைத்து, "டாடியானா! (அதுதான் அவன் மனைவியின் பெயர்) அடுப்பைச் சீக்கிரம் பற்ற வைத்து, நிறைய தோசை சுட்டுக் கொடு" என்று கூறினான்.

"எதற்கு? இவ்வளவு இருட்டான பிறகு அடுப்பைப் பற்ற வைத்துத் தோசையை யாராவது சுடுவதுண்டா? இந்த அசட்டுத்தனம் போதாது என்று இன்னும் என்னவெல்லாம் கேட்கப் போறீங்களோ தெரியவில்லையே!" என்று ரொம்பவும் அங்கலாய்த்தாள்.

"சும்மா வாதாடாமல், நான் சொன்னபடி செய்! எனக்கு ஒரு புதையல் கிடைத்திருக்கிறது, டாடியானா! அதை இன்றிரவே வீட்டுக்குக் கொண்டு வந்து சேர்த்தாக வேண்டும்!" என்றான்.

இதைக் கேட்டு அவன் மனைவி அளவு கடந்த மகிழ்ச்சியுற்றாள். கணத்தில் அடுப்பைப் பற்ற வைத்துத் தோசையைச் சுடத் தொடங்கினாள். அது மட்டுமில்லை; கணவனை அழைத்து, "தோசை சுடச்சுட இருக்கும்போதே சாப்பிடுங்கள்!" என்று உபசாரம் செய்தாள்.

குடியானவன் ஒரு தோசையைச் சாப்பிட்டான். மற்ற இரண்டு மூன்று தோசைகளை அவன் மனைவிக்குத் தெரியாமல் தன் பையில் திணித்துக் கொண்டான். அடுத்தாற் போல் ஒரு தோசையைச் சாப்பிட்டுக் கொண்டே இரண்டு மூன்றைப் பையில் திணித்துக் கொண்டான். குடியானவன் தட்டு சீக்கிரமாகக் காலியாவதைக் கண்டு, "இது என்ன இன்றைக்குப் பகாசுரன் விழுங்குவதைப் போல் விழுங்குகிறீர்களே! என்றால் நீங்கள் சாப்பிடும் வேகத்திற்குத் தோசைகளைச் சுட்டுப் போட முடியவில்லை. இதை ஒப்புக் கொள்கிறேன்!" என்றாள்.

"நான் ரொம்ப தூரம் போக வேண்டும்! புதையல் என்ன கனம் கனக்கிறது தெரியுமா? அதைச் சுமந்து கொண்டு வருவதற்கு நான் நன்றாகச் சாப்பிட்டாக வேண்டும் அல்லவா!'' என்றான்.

இப்படிச் சொல்லிக் கொண்டே தன் பை நிறையத் தோசைகளைத் திணித்துக் கொண்டான். பிறகு, "சரி, என் வயிறு நிரம்பி விட்டது. இனி நீ சாப்பிட்டு விட்டுச் சீக்கிரம் புறப்படு" என்றான்.

அப்படியே அவளும் வேகமாகச் சாப்பிட்டாள். பிறகு இருவருமாகப் புறப்பட்டனர்.

காரிருள் சூழ்ந்திருந்தது. குடியானவன் வேகமாக முன்னேறிச் சென்று, மரத்தின் கிளைகளில் எல்லாம் தோசைகளைக் கட்டித் தொங்க விட்டுக் கொண்டே போனான். சற்று நேரத்தில் பின்னால் வந்து கொண்டிருந்த மனைவி, மரத்தில் தோசைகள் தொங்குவதைப் பார்த்தாள். "பாருங்க! பாருங்க! மரத்தில் தோசைகள்!'' என்று ஆச்சரியத்தோடு கணவனைக் கூப்பிட்டுச் சொன்னாள்.

கணவன், "இதில் ஆச்சரியப்படுவதற்கு என்ன இருக்கிறது? சற்று நேரத்துக்கு முன்புதான் தோசை மழை பொழிந்ததே, நீ பார்க்கவில்லையா?'' என்று கேட்டான்.

"நான் மேலே பார்க்க வில்லை. மர வேர்கள் தடுக்கி விழாமலிருக்க நான் கீழேயே பார்த்து நடந்து வந்தேன். அதனால் வானம் தோசைகளை மழையாகப் பொழிந்ததைக் கவனிக்க வில்லை'' என்றாள்.

"நான் இங்கே முயல் பிடிப்பதற்கு ஒரு பொறி வைத்திருந்தேன். வா, அதைப் போய்ப் பார்ப்போம்'' என்றான்.

இருவருமாகச் சென்று பார்த்தார்கள். பொறியிலிருந்து மீனை எடுத்தான். இதைப் பார்த்ததும் குடியானவன் மனைவி, "இது என்ன ஆச்சரியமாக இருக்கிறதே! இந்தப் பொறியில் மீன் எப்படிச் சிக்கிக் கொள்ள முடியும்?'' என்றாள்.

"தண்ணீரில் வசிக்கும் மீனைப்போலவே நிலத்தில் வசிக்கும் மீனைப் பற்றிக் கேள்விப்பட்ட இல்லையா?'' என்று கேட்டான்.

"ஆச்சரியம்! என் கண்ணாலேயே இன்று பார்க்கவில்லை என்றால் நான் நம்பியே இருக்க மாட்டேன்!'' என்றாள்.

அவர்கள் ஆற்றங் கரைக்கு வந்தார்கள். "நீங்கள் இங்கே எங்கேயாகிலும்தானே ஆற்றில் வலை வீசி விட்டு வந்திருப்பீர்கள். நாம் அதைப் பார்ப்போமே'' என்றாள் மனைவி.

ஆற்றிலிருந்து வலையை இழுத்துப் பார்த்தார்கள். அதில் ஒரு முயல் இருந்தது!

"அட கடவுளே! இது என்ன இன்றைக்கு எதைத் தொட்டாலும் வியப்புக்கு மேல் வியப்பாக இருக்கிறதே! மீன் வலையில் முயல் கிடைப்பதாவது! நம்ப முடியவில்லையே!'' என்றாள்.

"எதைப் பார்த்து இப்படிக் 'காச்சு மூச்சு' என்று சத்தம் போடுகிறாய்? நீர் முயலைப் பற்றி உன் வாழ்நாளிலேயே கேள்விப்படாதவள் போல் சத்தம் போடுகிறாயே!'' என்றான் குடியானவன்.

"உண்மை. நான் இதுவரையில் கேள்விப் பட்டதே இல்லை'' என்றாள்.

இதற்குள் அவர்கள் புதையலிருந்த இடத்துக்கு வந்து விட்டார்கள். குடியானவன் பூமியைத் தோண்டிப் புதையலை எடுத்தான். அவர்களால் எவ்வளவு சுமக்க முடியுமோ அவ்வளவு தங்கத்தை எடுத்துக் கொண்டு புதையல் குழியை மூடிவிட்டுத் திரும்பினார்கள்.

திரும்பும் வழியில் அவர்கள் நிலத்தின் பண்ணையார் வீடு இருந்தது. அந்த வீட்டுக்குப் பக்கத்தில் சென்றபோது, 'பா ஆ ஆ ஆ......பா ஆ ஆ ஆ......' என்று ஆடு கத்தும் சத்தம் கேட்டது.

"இது என்ன சத்தம்! எனக்குப் பயமாக இருக்கிறதே!'' என்றாள் மனைவி.

"ஓடு! ஓடு சீக்கிரம்! பேய் பிசாசுகள் நம் எஜமானரின் கழுத்தைத் திருகுகின்றன. அந்தப் பிசாசுகள் நம்மைப் பார்த்து, நம் கழுத்தைத் திருக வரப்போகின்றன! ஓடு!'' என்றான்.



இப்படி இருவரும் மூச்சுத் திணற ஓடிச் சென்று வீட்டை அடைந்தனர்.

குடியானவன் தங்கத்தை மறைத்து ஜாக்கிரதையாக வைத்தான். பிறகு இருவரும் படுக்கச் சென்றனர்.

"ஜாக்கிரதை, டாடியானா! யாரிடமாகிலும் சொன்னால் பெரும் கஷ்டத்தில் அகப்பட்டுக் கொள்ளுவோம்!" என்றான்.

"கவலையற்றிருங்கள்! புதையல் சமாசாரத்தைப் பற்றி வெளியில் மூச்சுக்கூட விடமாட்டேன்!" என்றாள்.

மறுநாள் காலை வெகு நேரம் கழித்து அவர்கள் எழுந்தார்கள்.

குடியானவன் மனைவி வீட்டில் அடுப்பு பற்றவைத்து விட்டு, தண்ணீர் மொண்டு வர வாளியை எடுத்துக் கொண்டு கிணற்றடிக்குப் போனாள். கிணற்றங் கரையிலிருந்த அக்கம் பக்கத்து வீட்டுப் பெண்கள், "ஏன் இத்தனை நாழி கழித்து அடுப்பை மூட்டினாய், டாடியானா!" என்று கேட்டார்கள்.

"நேற்று ராத்திரி வெளியே போயிருந்தேன். திரும்பிவர வெகு நேரம் ஆகி விட்டது. அதனால்தான் பொழுது விடிந்ததுகூடத் தெரியாமல் நீண்ட நேரம் தூங்கி விட்டேன்" என்றாள்.

"ராத்திரியெல்லாம் என்ன செய்தாய்?"

"என் கணவர் ஒரு புதையல் கண்டு பிடித்தார். அதை வீட்டுக்குக் கொண்டு வருவதற்குத் தான் நேற்று ராத்திரி போயிருந்தோம்" என்றாள்.

அவ்வளவுதான். அன்று ஊர் பூராவும் இதுவே பேச்சாகப் போய் விட்டது. "டாடியானாவும் அவள் கணவனும் புதையலைக் கண்டார்களாம். அதிலிருந்து இரண்டு பெரிய பை நிறையப் பொன்னும் மணியுமாகக் கொண்டு வந்திருக்கிறார்கள்."

இந்தச் செய்தி அன்று மாலையே பண்ணையார் காதுகளையும் எட்டிவிட்டது. உடனே குடியானவனுக்கு ஆளை யனுப்பினார்.

அவன் வந்ததும், "நீ புதையலைக் கண்டெடுத்திருப்பதாக என்னிடம் ஏன் சொல்லவில்லை?" என்று கேட்டார்.

"புதையலா? புதையல் என்ற வார்த்தையே நான் கேள்விப்பட்டது கிடையாதே!" என்றான் குடியானவன்.

"உண்மையைச் சொல்லிவிடு. எனக்கு எல்லாம் தெரியும். உன் மனைவியே ஒவ்வொருவரிடமும் புதையல் கொண்டு வந்திருப்பதாகக் கூறியிருக்கிறாள்!" என்று கூறினார் பண்ணையார்.

"ஆ! அப்படியா! அவள் புத்தியே ஸ்வாதீனத்தில் இல்லையே! நீங்கள் கனவில் கூட நினைக்கமுடியாத விஷயங்களைச் சொல்பவளாயிற்றே!" என்றான் குடியானவன்.

"அதையும் தான் பார்த்து விடுவோமே!" என்றார் பண்ணையார்.

டாடியானாவுக்கு ஆளை யனுப்பி வரவழைத்தார் முதலாளி.

அவள் வந்ததும், "உன் கணவன் ஏதாகிலும் புதையல் கண்டெடுத்தானா?" என்று கேட்டார் பண்ணையார்.

"ஆமாம், ஐயா! புதையல் எடுத்தாரு!"

"அதைக் கொண்டு வருவதற்கு நீங்கள் இரவு வெளியே போனீர்களா?"

"ஆமாம், ஐயா, நாங்கள் போனோம்."

"அதைப் பற்றிய எல்லா விவரங்களையும் எனக்குச் சொல்லு!"

"முதலில் நாங்கள் காட்டு வழியாகப் போனோம். வழியில் மரங்களில் எல்லாம் தோசைகள் தொங்கின!"

"என்ன, தோசைகளா?"

"ஆமாம், ஐயா! பாருங்க, நேற்று தோசை மழையாகப் பெய்து கொண்டிருந்தது. அப்புறம் எங்கள் முயல் பொறியைப் பார்த்தோம். அதில் ஒரு பெரு மீன் இருந்தது. அந்த மீனை எடுத்துக் கொண்டு மேலே நடந்தோம். ஆற்றங் கரையை அடைந்தோம். அங்கு ஆற்றில் விரித்திருந்த மீன் வலையைப் பிடித்து இழுத்துப் பார்த்தால், அதில் ஒரு முயல் இருந்தது! முயலை எடுத்துக்கொண்டு மேலே நடந்தோம். ஆற்றுக்குக் கொஞ்ச தூரத்திலேயே என் கணவர் பூமியைத் தோண்டிப் புதையலை எடுத்தார். நாங்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு பை நிறையத் தங்கத்தை எடுத்து அள்ளிப் போட்டுக் கொண்டு திரும்பினோம். உங்கள் கழுத்தைப் பிசாசுகள் இறுகிக் கொண்டிருந்தபோது உங்கள் வீட்டு வழியாகப் போனோம்!" என்றாள்.

இதைக் கேட்டதும் பண்ணையாரின் கோபம் மீறிவிட்டது. காலை உதைத்தார், "மூடப் பெண்ணே! இதைவிட்டு வெளியேறு!" என்று இரைந்தார்.

"இப்பொழுது பார்த்தீர்களா, அவள் பைத்தியம் பிடித்து எப்படி உளறுகிறாள் என்பதை! அவளால் நான் படும் கஷ்டம் கொஞ்சமல்ல!" என்றான் குடியானவன்.

"என்னால் இப்பொழுது நீ சொன்னது உண்மை என்று நம்ப முடிகிறது. நீ வீட்டுக்குப் போகலாம்!" என்று கையசைத்தார்.

குடியானவன் வீட்டுக்குப் போய்ச் சந்தோஷமாக வாழ்கிறான். அவன் இன்னும் பண்ணையாரை ஏமாற்றிவிட்ட வேடிக்கையை நினைத்து நினைத்துச் சிரிக்கிறான் என்று நினைக்கிறேன்!

விக்ரம் புரொடக்ஷன்ஸ்

# தெனாலிராமன்

...தமிழ்...



# டூமெக்ஸ் பால் உணவு

குழந்தைகளுக்கு டூமெக்ஸ் புகட்டி அவர்களின் வளர்ச்சியைக் கவனியுங்கள்!

# சிவன் கீர்த்தனைகள்

ஸ்வர அமைப்பு: செம்மங்குடி சீனிவாச ஐயர்

கீர்த்தனை 20 — ராகம்: காம்போதி — ஆதி தாளம்

## பல்லவி

குஞ்சிதபாதம் நினைந்துருகும் பைங்
கொடிதனைக் கண்பாராய் இரவுபகல் (குஞ்சிதபாதம்)

## அனுபல்லவி

கஞ்சமலர் இதழின் விழியாள் உயாக்
காதலுடன் சிவகாமி மனோனின் (குஞ்சிதபாதம்)

## சரணம்

கொஞ்சும் சதங்கை கலீர்கலீரென
குழவி இளம்பிறைப் பளீர்பளீரென
தஞ்சம் தவழும் நீலகண்டமும் மின்ன ஒரு
நங்கை கங்கை சடையில் குலுங்க நடமாடும் (குஞ்சிதபாதம்)

காம்போதி ராகம் 28வது மேளமாகிய ஹரிகாம்போதியில் பிறந்ததாக வகுக்கப்பட்டிருக்கிறது. (வேங்கடமகியின் ஸம்பிரதாயப்படி ஹரிகேதார கௌளையில் பிறந்ததாக) காம்போதி ராகம் பழைய பிரஸித்த ராகங்களிலொன்று. பாஷாங்கம் ரக்தி ராகம் அன்னிய ஸ்வரம் காகலிநிஷாதமாகும். எப்பொழுதும் பாடத் தகுந்த ராகம்.

இதன் ஆரோஹணம்: ஸ ரி க ம ப த ஸ்
அவரோஹணம்: ஸ் நி த ப ம க ரி ஸ

ஸ நி* பா த ஸ்ா என்ற இடத்தில் காகலி நிஷாதம் பிடித்துப் பாடுவது வழக்கத்தில் இருந்து வருகிறது. இந்த ராகத்தில் வரும் ஸ்வர ஸ்தானங்கள், சதுச்ருதி ரிஷபம், அந்தர காந்தாரம், சுத்த மத்யமம், சதுச்ருதி தைவதம், கைசிகி நிஷாதம். காகலி நிஷாதம் அபூர்வமாகப் பிடிப்பதுதான் ஸம்பிரதாயம். சில ஸஞ்சாரங்கள் ஸரிமகமாப—ரிமகஸா—பமகஸா—ஸரிகஸா—பதமா—பதநிதமா—போன்றவை பழைய வர்ணங்கள் கீத, கீர்த்தனங்களில் காணப்படுகின்றன.

* இந்த அடையாளம் காகலி நிஷாதத்தைக் குறிக்கும்.

## பல்லவி —1 களை

| | | | |
|---|---|---|---|
| 1 | ; , த ஸ் நி தா பா ; தா நீ | மா த ப ப ம கா | மா ; ; த ப ‖ |
| | கு · ஞ்சித பா தம் நி | னை · · ந்து· கு | கும் பை· |
| | ம க ப தா ஸ் ஸ்ா ஸ்ா ; ஸ் நி* பா | த ஸ்ா , ; த ரி | நீ தா பா பம ‖ |
| | · · ங்கொடித னை க்கண் பா · · | ராய் · இ · | ர வு ப கல்· |
| 2 | பா த ரி ஸ் நி தா பா ; தா நீ | த ப தநிதா ப ம கா | மா ; ; த ப ‖ |
| | .கு · · · ஞ்சித பா தம் நி | னை· · · · · ந்துரு | கும் பை· |
| | ம க ப தா ஸ் ஸ்ா தாஸ்ரி ஸ்ா,ரி ஸ்நி*பா | த ஸ்ா , ; தரிஸ்ா | ஸ் நி நி த த ப ப ம ‖ |
| | · · ங்கொடி த னை க்கண்· · · · பா · · | ராய் · இ · · | ர · வு · ப · கல்· |
| 3 | ப த ஸ்ாரிக்ரிஸ் நிதா பா ; தா நீ | த ப தநிதா ப ம கா | மா ; ; த ப ‖ |
| | கு · · · · · · · ஞ்சித பா தம் நி | னை · · · · · ந்துரு | கும் பை· |
| | ம க ப தாஸ் ரி,க் ரிஸ்நீ தா த ப தா | ஸ்ா,ரி க்ா ஸ்ா ரி,க் | ஸ்ா,ரி நீ தா மா ‖ |
| | · · ங்கொடிதனை · க்க · · ண்· பா· · | ராய் · · · இ · | ர · வு ப கல் |

ப த ஸ்ாரிக்ரிஸ் நி தா
கு · · · · · · · ஞ்சித பாதம் நினைந்துருகும் பைங் கொடிதனைக் கண் பாராய் என்று 2-வது ஸங்கதி போல் நிறுத்தவும்.

## அநுபல்லவி

1 ; ப தா ப தா ஸ்ா , ஸ் ாி க்ம்க்ா | ாிஸ்ா, ாி,க் ாிஸ்ா, ; | , நி நி த த ப தா ||
க · ஞ்சம வர் இ த ழின் - - வி · ழி · யான் · · · · · · ·

2 ; ப தா ப தா ஸ்ா , ஸ் ாி க்ம்கா | ாிஸ்ாி க்ம்கா ாி ஸ்ா | ; நி நி த ப தா ||
க · ஞ்ச ம வர் இ த ழின் - - வி - - ழி - - - யான் · ஓ · · யாக்

; , தா ஸ் ாி,க் ாிஸ்நி தா , ப தா | ஸ்ா ஸ் ாி ஸ் நி தா | பா ; நி த த ம ||
கா த லு · டன் · சி வ கா - - - · மி ம ரூ ன - வின்

3 ; த ாி ஸ் ாி,க் ாிஸ்நி தா , ப தா | ஸ்ா ாிக்ாி ஸ் நி தா | பா ; பநிதா த ம ||
கா · த லு · டன் · · சி வ கா - - - · மி ம ரூ ன - - வின் ·

|| குஞ்சிதபாதம் ||

## சரணம்

பா த நி , த ப ப நி த த மா ப த | தாாிஸ் ஸ்நி, நா த ப | தா ; தா தா ||
கொ · ஞ்சும் ச · த · · ·ங்கை· க · வீ · · ர் · · · · க · வீ ரெ ன

; ம நி த பா ப ம த ப ம க ம ப | த நி பா ; தா | ஸ்ா ; ஸ்ா ஸ்ா ||
கு ழ வி இ னம்· பி · றை · ப · வீ · · ர் ப வீ ரெ ன

பா , த பா தா ஸ்ா ஸ்ா ஸ்ா , ாி | ாி ஸ் ாி க் ம் க் ாி,க் | ாிஸ்ா, நி நி த பா ||
க ஞ் ச ம் · த வ ழும் நீ ல க · · ·ண்டமும் ·மி· ன் ன · ஓ · கு

தா , நி பா பநிதா த மா தபாமகா மா | ப பா பா , ம க | மா , பா , தா ||
கங்கை · க · · ங்கை · ச·டை · யில் கு ழு ங்க க · ட மா டும்

|| குஞ்சிதபாதம் ||




திருக்குற்றாலம்
22—2—53

"எந்தையாய்" "திகைத்து" "தெளிந்து" என்ற வார்த்தைகளைக் கொண்ட பாடல்களை உள்ளூர அநுபவித்திருக்கிறீர்கள். அப்படி எல்லாம் அநுபவிப்பது நமக்குள் அபூர்வமாய்ப் போய் விட்டது. நீங்கள் அநுபவித்தது போதும் என்று சொல்லத் தோன்றுகிறது. பெருந்தேவனார் வீணுக்குப் பாடவில்லை என்று ஆகிறதல்லவா? எவ்வளவோ ஆறுதலைக் கொடுக்கிறது எனக்கு அது.

டானிக் இது அது என்று எத்தனையோ கொடுத்துப் பார்க்கிறார்கள் எனக்கு. ஆனால் உங்கள் கடிதத்தை வாசிப்பதால் உண்டான தேற்றம் அவைகள் ஒன்றிலுமில்லை. அது அப்படி இருக்கட்டும். 'கல்கி'யில் வரும் "தமிழ்க் களஞ்சியம்" உங்கள் பார்வைக்கு வரும். பாடல்களை அநுபவிக்க வேண்டியதுதான். விஷயம் எதுவாயும் இருக்கலாம். எப்படியும் இருக்கலாம். கவிக்கு அவைகள் ஸ்தூலப் பொருள்கள் தானே. தமிழ் பாஷை அல்லவா சிருஷ்டித் தொழிலைச் செய்கிறது. கவியின் பெருமை எல்லாம் பாஷைக்கே உரியது. அற்புதமான முறையில் சொல்லையும் தாள இயலையும் (Rhythm) கண்டு பிடித்து தெய்விக உருவம் கொடுத்து விடுகிறது பாஷை. இந்த உண்மை தெரிந்தால்தானே கவி இன்னது என்று தெரிய வரும். பள்ளிக் கூடத்தில் விஷயத்தையே பார், பார், பொழிப்புரை எழுது என்று சொல்லி பரீக்ஷையும் வைத்து பாவத்தையும் ஆனந்தத்தையும் ஒதுக்க நேர்ந்து விட்டது. தமிழ்க் களஞ்சியத்துப் பாடல்களில் பாவமும் ஆனந்தமும்தான் இருக்கின்றன. ஆனால் நம்முடைய நண்பர்களுடைய கண்ணுக்கு அவைகள் படுவதில்லை. அப்பாவிகள் என்ன செய்வார்கள். விஷயத்தையே பற்றி நின்று விடுகிறார்கள். கோயிலைப் பார்க்காமல் செங்கலை உருவிக் கையில் வைத்துக்கொண்டு ஆர்ப்பாட்டம் பண்ணுகிறார்கள்!

டி. கே. சிதம்பரநாதன்




மாடல் டிஏ 224 ஏவிபில், டியு 224 ஏவி / டிவிபில்; எல்லை வேவ் 8-பாண்டு, 5-வால்வுகள். ரூ. 425.

# மர்பி ரேடியோ



## வளரும் குழந்தைகளின்

### போஷிப்பிற்கு இன்றியமையாதது

குழந்தைகளின் உடம்பைப் பராமரித்து வளர்ப்பதில் சரி இணையற்ற ஏஜண்டாக விளங்குகிறது விடோபேரின். உடலில் ரத்தமின்மை, வைடமின்கள் குறைவு மற்றும் உடலுக்குப் பலவீனத்தை விளைக்கும் கோளாறுகள் பலவற்றையும் போக்க இது சிறந்த டானிக்காக விளங்குகிறது.



# விடோபேரின்

தயாரிப்பாளர் :

ஸ்ரீ மைசூர் இண்டஸ்ட்ரியல் & டெஸ்டிங் லாபரேட்டரி லிமிடெட், மல்லேஸ்வரம், பெங்களூர்

ஸேல்ஸ் டிப்போ : 35/37, தம்பு செட்டித் தெரு, சென்னை-1




## 55. செப்பறை

பொருனை யாற்றின் கரையிலே செப்பறை என்றொரு தலம் உண்டு; தனியே அதற்கொரு நலம் உண்டு. சோலையும் வயலும் சூழ்ந்த அத் திருப்பதியில் தனக்குவமை யில்லாத் தலைவன் தன்னந் தனியனாய்த் தாண்டவம் புரிகின்றான். 'அழகிய கூத்தன்' என்னும் அருமைப் பெயர் பெற்ற அப் பெருமான் ஐந்தொழில் புரியும் ஆலயத்தின் அருகே அறுதொழிலோர் இருக்கை இல்லை; மாட வீதிகளைச் சுற்றி மக்கள் குடியிருப்பும் இல்லை.

இத்தகைய செப்பறையைச் சேர்ந்த சிற்றூர் இராசவல்லிபுரம் எனப்படும். பயிர்த் தொழில் செய்யும் கார்காத்த வேளாளர் பண்புற்று வாழும் அவ்வூரில் அகிலாண்டநாயகி கோயில் கொண்டுள்ளாள். அவ்வம்மையை மதுரத் தமிழால் பாடினார் மாதவச் சிவஞான முனிவர்.

"அருள்ஞான வாரியே
    ராசை மேவிய செல்வ
அகிலாண்டம் என்னும் அரசே"

(வாரி – கடல்; ராசை - இராசவல்லிபுரம்.)

என்பது அவர் திருவாக்கு.

அருட் செல்வமும் பொருட் செல்வமும் உடையார் பலர் அவ்வூரில் வாழ்ந்தார்கள். செப்பறையில் ஆனந்த நடம் புரியும் அழகிய கூத்தர்க்கு வழி வழியாகத் தொண்டாற்றும் திருமடம் ஒன்று அங்குண்டு. செப்பறை மடம் என்று பெயர் பெற்ற அந்நிலையத்தில் கலைஞானமும் மெய்ஞ்ஞானமும் நிரம்பிய மேலோர் பலர் விளங்கினர். தென்கலையும் வடகலையும் வளர்த்தனர். அன்னார் பெருமை தென்னாடெங்கும் பரவிற்று. இருநூறு ஆண்டுகளுக்கு முன்னே நாஞ்சில் நாட்டைச் சேர்ந்த நல்லறிஞர் ஒருவர் செப்பறை மடத்தை நாடி வந்தடைந்தார்; கல்விக் களஞ்சியமாய் விளங்கிய கனகசபாபதி தேசிகரைக் கண்டார்; அவர் அடியின் கீழ் அமர்ந்து அருங்கலை பயின்றார். தமிழ் மொழியில் "இலக்கணக் கொத்து" முதலாய பல நூல்கள் இயற்றிப் புகழ்பெற்ற அப்பெரியார் செப்பறை மடத்தைச் சிந்தையாரப் போற்றியுள்ளார்.

"செப்பறைப் பதியில்
    வாழ்சிவத் துவிசன்
கனக சபாபதி
    கருதுவட நூற்கடல்
தபோதனர் புகழும்
    சைவாதி ராசன்
உபய பதங்களை
    உண்மையொடு பணிவாம்"

(தபோதனர் - முனிவர்; உபய பதங்களை - அடிகள் இரண்டையும்)

என்பது அவர் பாடிய ஆசிரிய வணக்கம்.

முத்தமிழின் சுவை தேர்ந்த வித்தகர் பலர் அவ்வூரிலே தோன்றினர். அன்னவருள் ஒருவர் மன்னன் முத்துசாமி என்ற பாவலர் உலகத்தில் பாராட்டப் பெற்றார்.

அவர் கார்காத்த வேளாளர் குலத்தைச் சேர்ந்தவர்; கற்றவர்க்கு உற்ற துணைவர். தென் பாண்டி நாட்டுக் கவிஞருள் ஒருவராகிய அழகிய சொக்கநாதர் அவருடைய அன்பிற்கும் ஆதரவிற்கும் உரியவராயினார்.

“இரத்தினம் போலும்
புவியோர் புகழ இராசவல்லி
புரத்தினில் மேவிய
பாபவி நாச புரவலன்தன்
வரத்தினில் வந்திடும்
மன்னவன் முத்துசு வாமிவள்ளல்
கரத்தினை நோக்கி
மிகநாணும் வானுள்ள கற்பகமே”

(புவி - உலகம்; புரவலன் - இரட்சகன்)

என்று அழகிய சொக்கநாதர் இசைத்த பாட்டில் இராசை முத்துசாமி வள்ளலின் பிறப்பும் சிறப்பும் ஒருங்கே விளங்குகின்றன.

ஒருநாள் மன்னன் முத்துசாமியைக் கண்டு பரிசு பெறக் கருதி வந்தார் ஒருவர். அப்போது வள்ளல் வெளியே சென்றிருந்தார். அழகிய சொக்கநாதர் அவரை அன்புடன் வரவேற்றார். உண்பதற்கு இனிய கனிகளைக் கொடுத்து உபசரித்தார். வந்தவர் தமது மத்தளத்தை எடுத்து அழகிய சொக்கநாதரிடம் கைவரிசை காட்டத் தொடங்கினார். அவர் கைதேறாத கற்றுக்குட்டி என்பதை மத்தளம் நன்கு முழக்கிற்று. அப்போது வள்ளல் வீட்டை நோக்கி வந்து கொண்டிருந்தார். அழகிய சொக்கநாதர் அவரை எதிர் கொண்டு அழைப்பார் போல் எழுந்து சென்று,

“எங்கள்முத்து சாமிமன்னா இங்கே ஒருவன்வந்து
தங்கமதை ஓயாமல் தட்டினான்—அங்கங்கே
கூடிநின்ற பெண்களெருக் கொள்வதற்குக்
கூடையெடுத்து
ஓடிவந்தார் நீபார்த்தா யோ”

“மன்னவா! சற்று முன் இங்கே ஒருவர் வந்தார்! மத்தளத்தை எடுத்தார்; ஓயாமல் தட்டினார். அங்கங்கே நின்ற பணிப் பெண்கள் அவர் எருத் தட்டுகிறார் என்று எண்ணிக் கூடையை எடுத்து ஓடி வந்தார்கள்! அக் காட்சியை நீ கண்டாயோ?” என்று நகைச்சுவை ததும்ப வினவினார். எருத்தட்டிய கையிலும் ஏற்ற பரிசளித்து அனுப்பினார் முத்துசாமி வள்ளல்.

வரிசை யறிந்து அறிஞர்க்குப் பரிசளிக்கும் இயல்பு வாய்ந்த அவ் வள்ளல் வருந்தி வந்தவர் எவரையும் வறிதே அனுப்புவதில்லை. இல்லை என்ற சொல் அவரிடம் இல்லை.

செப்பறைப் பதியை நோக்கி ஒருநாள் முத்துசாமி வள்ளலும் அழகிய சொக்கநாதக் கவிஞரும் செல்லும் பொழுது காயும் இலையும் செறிந்து குலுங்கிய ஒரு செழுஞ் சோலை அவர் கண்களைக் கவர்ந்தது. அந் நிலையில் வள்ளல் கவிஞரை அமர்ந்து நோக்கி “ஐய! காய் என்று தொடங்கி இலை என்று முடியும்படி ஒரு கவி சொல்லுக” என்று வேண்டினார். உடனே எழுந்தது ஒரு பாட்டு.

“காய்சினம்இல் லாதான் கருணைமுத்து
சாமிவள்ளல்
வாய்மையுளான் பாடி வருவோர்க்குத் —
தாய்நிகர்வான்
எல்லையில்லா மாண்பொருளை ஈவான்
இவனிடத்தில்
இல்லையென்ற சொல்லே இலை”

(காய்சினம் - கடுங்கோபம்; இலை - இல்லை)

என்ற நல்ல பாட்டைக் கேட்ட வள்ளல் நாணித் தலை கவிழ்ந்தார். இலையும், தழையும், காயும் பழமும் நிறைந்து நின்ற சோலையைக் கவிதையிலே காணலாம் என்று எண்ணியிருந்த வள்ளல் ஏமாற்ற முற்றார். எனினும் பழுத்த பண்புடைய ஒரு பெருமகனைப் பற்றிய பாட்டு தமிழ் நாட்டுக்குக் கிடைத்தது. முத்துசாமி வள்ளலின் உள்ளத்தில் செம்மை உண்டு; வெம்மை இல்லை. அவர் வாக்கில் உண்மை உண்டு; இல்லை என்ற சொல் இல்லை. அவர் கையிலே வரையாது கொடுக்கும் திறம் உண்டு; கரவில்லை என்பது இப் பாட்டில் அழகுற விளங்குகின்றது.

இராசை முத்துசாமி வள்ளலின் பண்பாட்டை அறிந்த கவிஞர் தமிழ் நாட்டில் உள்ள நாவலர்களுக்கு ஒரு விண்ணப்பம் செய்கின்றார். “கற்று அறிந்த கவிஞர்களே! மனக் கவலை தீர வேண்டுமானால் முத்துசாமி மன்னனைப் பாடுங்கள்! அவன் நினைத்தால் உங்கள் வறுமை நிலை குலைந்து ஓடும்! மூடர்கள் முன்னின்று இனி முட்டி முட்டிப் பாடாதீர்! இதுவரை கயவரைப் பாடிய காயிதங்களைக் காற்றிலே பட்டமாய்ப் பறக்க விடுங்கள்! இளம் பிள்ளைகளுக்காவது அவை இன்பம் பயக்கும்” என்று கொடாக் கண்டரைப் பழித்துரைக்கின்றார்.

“நட்டமுண்டோ முத்து
சாமியைப் பாடுமின் நாவலீர்காள்
இட்டம்வைத் தால், கவி
தீர்த்திடுமே முன்னம் ஏதும் புகல்
முட்டிக் கயவரைப்
பாடிய காயித முட்டைகளை
பட்டம தாய்க் கட்டி
விட்டாலும் வேடிக்கை பார்ப்பவர்க்கே”

என்பது அழகிய சொக்கநாதரது வேண்டுகோள். இவ்வாறு முத்தமிழ் வாணரின் வாழ்த்துரை பெற்ற வள்ளலின் குடும்பம் இன்றும் வாழையடி வாழையென வாட்டமின்றி வாழ்ந்து வருகின்றது.



# பாலைச் சாப்பிட மிக நேர்த்தியான வழி

## ப்ரௌன் அண்டு போல்ஸன் பிளவர்டு கார்ன் பிளவர்

ப்ரௌன் அண்டு போல்ஸன் ப்ளேவர்டு கார்ன்
பிளவரினாலான பிளாமான்ஜ் என்ற தின்
பண்டத்தை குழந்தைகள் மிகவும் விரும்புகிறார்கள்.
கறந்த பாலின் இயற்கை போஷாக்குச் சத்துக்களை
அடைய சிரமமில்லாத வழிகளில் இது ஒன்று.
ஆசையூட்டும் ஐந்து சுவைகளில் கிடைக்கின்றன :
**வனில்லா, ராஸ்பெரி, காரமல், ஸ்ட்ரா
பெரி, மற்றும் பைன் ஆப்பிள்.**

CARAMEL
VANILLA
RASPBERRY
PINEAPPLE
STRAWBERRY



**கார்ன் பிராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா) லிட்.**

பம்பாய்-1 – கல்கத்தா-1.

## அத்தியாயம் 26

# மன மாற்றம்



ந்திரமணியின் பிரிவினால் மிகவும் கஷ்டப்பட்டவர் பண்ணையார் மந்திரமூர்த்திதான். அந்தப் பெரியவர் சந்திரமணியிடமும் இந்துமதியிடமும் வைத்திருந்த அன்புக்கு உதாரணமே கூற முடியாது. சுயநலமென்ற ரேகையைக் கூட அவருடைய கருத்தில் காண முடியாது. சந்திரமணியின் பிரிவினால் திடீரென்று அவர் ரொம்ப வயதானவராகக் காணப்பட்டார். நான் தனிமையில் அவரைத் தேற்றினேன். அவருடைய துணை இந்துவுக்கு எவ்வளவு அவசியமென்றும், நான் சீமை சென்று திரும்பி வரும் வரையில் இந்துவைக் கவனித்துக்கொள்ளும் மகத்தான பொறுப்பு அவருக்கு இருப்பதால் உடம்பை ஜாக்கிரதையாகக் கவனித்துக் கொள்ள வேண்டுமென்றும் கூறினேன். அதன் பிறகு அவர் கொஞ்சம் மனம் தேறி வேலைகளைக் கவனிக்க ஆரம்பித்தார்.

பின்னர் சில நாட்கள் விசேஷமாக ஒன்றும் நடக்கவில்லை. சொக்கையாவின் ஆர்ப்பாட்டங்கள் ஓய்ந்து விட்டன போல் தோன்றியது. எங்கள் வழிக்கே அவர் வரவில்லை. அவரைச் சில சமயங்களில் பார்க்கும்படி நேரிட்ட போதெல்லாம் கூடச் சாதாரணமாக இருந்தார். அவருடைய மனம் மாறி விட்டதோ என்றுகூட நான் சந்தேகப்பட்டேன்.

ஒரு நாள் திடீரென்று தங்கபாண்டியன் ஒரு விஷயத்தைச் சொன்னான். "துரை! மாமா மாறிப் போய் விட்டார் என்று நினைத்தோமே. இரண்டு நாட்களுக்கு முன்னால் கிழக்குப் பக்கத்தில் இருந்த பத்து வேலி நிலத்தை விற்று விட்டாராம். இதை நாம் எதற்காகப் பொறுத்துக் கொண்டிருக்க வேண்டும்? வக்கீலிடம் கலந்து கொண்டு வழக்குப் போட்டால் என்ன?" என்று படபடப்போடு கூறினான்.

"அவசரப்பட்டு எதையும் செய்யக் கூடாது, பாண்டியா. வழக்குப் போடுவதனால் நியாயம் உடனே கிடைத்து விடுமென்பது நிச்சயம் இல்லை. அப்படியே வெற்றி கிடைத்தாலும் சொக்கையாவின் தீராத பகைக்கு நாம் ஆளாக நேரிடும். நமக்குப் பணத்தை விட மனிதர்களுடைய நல்லெண்ணமே பெரிய செல்வம்."

"பெரிய தத்துவ ஞானி மாதிரி பேசுகிறாயே? சொக்கையா மாமாவிடம் நல்லெண்ணத்தை எதிர்பார்க்கச் சொல்கிறாயா? நல்ல வேடிக்கை!"

"ஏன் அதில் வேடிக்கை என்ன இருக்கிறது? நீ வேண்டுமானால் பார். சொக்கையா மாமா இனிமேல் நம்மிடம் சரியாக நடந்துகொள்வார். அன்றையச் சம்பவத்துக்குப் பிறகு இது வரையில் நம்மிடம் ஏதேனும் தகராறு செய்தாரா? ஆகவே அவர் தன் நிலையை உணர்ந்து கொண்டு விட்டாரென்றே நினைக்கிறேன். நம் கட்சியில் தான் நியாயம் இருக்கிறதென்று அவருக்குத் தெரியாதா? உன்னிடம் விரோதித்துக் கொண்டால் அவருக்குக் கஷ்டம்தான் ஏற்படும். இந்த விஷயம் போனால் போகிறதென்று விட்டு விட்டால் மேலே நாம் செய்ய வேண்டிய காரியங்களுக்கு அநுகூலமாக இருக்கும். இதில் நாம் மனக் கசப்பைத் தேடிக் கொண்டோமென்றால் பின்னால் ரொம்ப இடைஞ்சல்கள் ஏற்படும்."

"நானும் ஏதோ ஒரு கொதிப்பில் சொல்லிறேனே தவிர அவரிடம் எதிர்த்து நிற்க எனக்குத்



துணிவுவராது, துரை! நீ இருக்கும்போது ரொம்பத் தைரியமாக இருக்கிறது. நீ இந்த வீட்டைத் தாண்டிப் போய் விட்டால் அதைரியம் வந்து சூழ்ந்து கொள்கிறது. நீ சீமை செல்வதற்கு முன்னால் எல்லாவற்றையும் முடித்து விட வேண்டும். இல்லாவிட்டால் சொக்கையா என்ன வேண்டுமானாலும் செய்து கொள்ளட்டும் என்று விட்டு விட்டு நான் எங்கேயாவது போய்விடுவேன்.''

''நீ இப்படிப் பேசுவது எனக்குக் கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை, பாண்டியா! நீ பொறுமையாக இருக்க வேண்டும் என்று சொல்கிறேனே தவிர, அதைரியப்படச் சொல்லவில்லையே. ஆத்திரப்பட்டுக் காரியங்களைக் கெடுத்து விடுவது. இல்லையென்றால் ஓடிப்போய் விடுவது. இதுதான் உன் சித்தாந்தமா? உன்னுடைய நலத்துக்காக மாத்திரம் தான் நீ வாழ்கிறாயா? மாமாவினால்



கஷ்டப்படும் அத்தனை பேரையும் நீதான் விடுதலை செய்ய வேண்டும். ஆனால் அதற்குப் பொறுமையும் முன் யோசனையும் வேண்டும். எதற்கும் நம்முடைய வக்கீலைச் சீக்கிரம் வரச் சொல்லிக் கடிதம் எழுது. அவரைக் கலந்து கொள்ளலாம்'' என்றேன்.

அன்று மாலை இந்துமதியைப் பார்த்தபோது அவள், சுசீலாதேவி புதுச்சேரி போகும் விஷயத்தைக் கூறினாள். அப்போதுதான் எனக்குச் சொக்கையா சிவப்புப் பங்களாவையும் பாதிரித் தோட்டத்தையும் வாங்கியிருக்கும் விஷயம் தெரிய வந்தது. அதைக் கேட்டதும் சொக்கையா இப்போது எதற்காக ஜமீன் நிலத்தை விற்றிருக்கிறார் என்ற விஷயம் தெரிந்து விட்டது. எனக்கே அது கொஞ்சம் அதிர்ச்சி

யாகத்தான் இருந்தது. ஒருவருடைய சொத்தை விற்றுத் தனக்குப் பகிரங்கமாக உபயோகித்துக் கொள்வதற்கு எவ்வளவு நெஞ்சழுத்தம் வேண்டும்? ஆயினும் உடனே ஒன்றும் செய்வதற்கு இயலாமல் இருந்தது.

இதை நான் தங்கபாண்டியனிடம் கூறியபோது ரொம்ப ஆத்திரப்பட்டான். நான் சமாதானப்படுத்தினேன்.

“உனக்கு அதிகாரங்கள் வந்துவிடுமென்று அவருக்குத் தெரிந்திருப்பதால் தான் அவர் இப்போது அவசரமாக இப்படி ஒரு காரியம் செய்திருக்கிறார். இதை நாம் பொறுத்துக் கொண்டிருக்க வேண்டியதுதான். இனிமேல் ஒன்றும் செய்ய முடியாதல்லவா? அவர் நம்மிடம்கூட இனிமேல் இன்னும் சரியாக நடந்து கொள்வார் பார். மேலும் அவருக்கென்ன? மனைவி மக்கள் இருக்கிறார்களா? அவருடைய காலத்துக்குப் பிறகு எல்லாம் உன்னைத்தானே சேரும். நீ கொஞ்சமும் கவலைப்பட வேண்டியதில்லை” என்றேன்.

நான் எதிர்பார்த்தபடியே நடந்தது. சொக்கையா அதன் பிறகு என்னிடம் கூடப் பேச ஆரம்பித்தார். எங்களோடு சேர்ந்து சாப்பிட்டார். அதைக் கண்டு நானும் சந்தோஷப் பட்டேன்.

ஒருநாள் திடீரென்று என் சீமைப் பயணத்தைப்பற்றியெல்லாம் அக்கறையுடன் விசாரித்தார். நானும் அதையெல்லாம் மகிழ்ச்சியுடன் சொன்னேன்.

“எனக்கும் சீமைக்கு வந்து பார்க்க வேண்டுமென்று ரொம்ப ஆசை” என்று கூறினார்.

“ஏன் நீங்கள் மனம் வைத்தால் உல்லாசப் பிரயாணம் செய்யலாமே?” என்றேன் நான்.

“எல்லாவற்றுக்கும் அதிர்ஷ்டம் வேண்டாமா? தங்கபாண்டியனுடைய அப்பாகூட வெளிநாடுகளுக்குப் போக வேண்டும் என்று ஆசைப்பட்டார். ஆனால் அது நிறைவேறாமலேயே போய் விட்டது” என்றார்.

தங்கபாண்டியனுடைய முகம் சிவந்தது. எனக்கு அது வியப்பை அளித்தது. சொக்கையா ஒன்றும் தவறாகச் சொல்லவில்லையே என்று நினைத்தேன்.

பிறகு அதைப்பற்றி அவனைக் கேட்டபோது, “சொக்கையா மாமா ரொம்பப் பொல்லாதவர், துரை. அவர் நம்மிடம் சகஜமாக இருக்க இருக்க எனக்குக் கவலைதான் அதிகமாகிறது!” என்றான்.

அவனுடைய முக பாவம் அவன் எதையோ மறைப்பதுபோலத் தோன்றியது. ஆனால் நான் அதற்கு மேல் ஒன்றும் கேட்கவில்லை. தானாகச் சொல்லுவான் என்று விட்டு விட்டேன்.

ஒருநாள் இந்துவின் வீட்டில் நான் இருந்தபோது ஒரு புதிய மனிதர் விஜயம் செய்தார். அய்யாக்குட்டி என்ற பெயருள்ள ராஜாராம், மந்திரமூர்த்திப் பண்ணையாருக்கு உறவினரென்று தெரிந்து கொண்டேன். முதலில் அவரைப் பற்றி எனக்கு நல்ல எண்ணம் ஏற்படவில்லை. நாளடைவில் மாறி விட்டார். சீமையைப் பற்றியும், மற்ற



இடங்களைப் பற்றியும் அடிக்கடி பேசி ரொம்பப் ‘போர்’ அடித்தார். ஆனால் பின்னால் அவர் இந்துமதிக்குச் செய்திருக்கும் உதவிகளை நினைத்து நான் அதையெல்லாம் மறந்துவிட வேண்டும்.

அய்யாக்குட்டியின் வரவினால் நானும் இந்துமதியும் வீட்டில் நிம்மதியாகப் பேசுவதற்கு முடியாமல் போய்விட்டது. நான் கூடிய சீக்கிரம் சீமை சென்றுவிட வேண்டியிருக்குமாதலால் இந்துவோடு எவ்வளவு நேரம் முடியுமோ

அவ்வளவு நேரம் பேசிக் கொண்டிருக்க வேண்டுமென்று விரும்பினேன். அவளுக்கு என் விருப்பு வெறுப்புக்களையெல்லாம் கூறவேண்டும். அவளுடைய மனோபாவங்களையெல்லாம் புரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவல் பொங்கிக் கொண்டே இருந்தது.

ஆகவே இந்துவைப் பாதிரித் தோட்டத்துக்கு வரச் சொல்லி வற்புறுத்துவேன். பாதிரித் தோட்டம்தான் இந்துவின் வீட்டுக்கு அருகில் இருந்தது. நாங்கள் இருவரும் நேரம் போவதே தெரியாமல் பேசிக் கொண்டிருப்போம். என்ன விஷயம் பேசினோம் என்பது நினைவே இல்லை. சில சமயங்களில் இந்துவின் மிருதுவான பட்டுப்போன்ற கரத்தை என் கையில் எடுத்துக் கொள்வேன். பிறகு பேசவே வராது. ஒரு வார்த்தைகூடப் பேசாமல் வெகுநேரம் உட்கார்ந்திருப்போம்.

ஒரு நாள் இந்துமதி, பாதிரித் தோட்டத்தில் நாங்கள் சந்தித்த போது, சுசீலாதேவி தன்னைச் சொக்கையாவின் கண்களில் படாமல் ஜாக்கிரதையாக இருக்கச் சொன்னதாகக் கூறினாள். எனக்கு அது ஒரு பெரிய விஷயமாகத் தோன்றவில்லை.

இந்துவுக்குப் பாரதியாரின் காதல் கீதங்களைப் பாடிக் காட்டும் போது எனக்கு அளவிலாத ஆனந்தம் உண்டாகும். அவள் கவிதைகளின் பொருளை உணரும் போது, வெட்கத்துடன் புன்முறுவல் தவழ, நிற்கும் காட்சி இப்போது கூடக் கண் முன்னால் நிற்கிறது.

பாதிரித் தோட்டத்தில் அன்று நான், "இந்து! எனக்காக நீ இன்னும் இரண்டரை வருஷங்கள் என்ன நேர்ந்தாலும் சமாளித்துக் கொண்டு காத்திருப்பாயா?" என்று கேட்டேன். மந்திர மூர்த்திப் பண்ணையார் தமது பொறுப்பைச் சீக்கிரம் நிறைவேற்றி விட வேண்டும் என்று அவளுக்கு விவாகம் செய்து விட விரும்பலாமல்லவா? அதை நினைத்துக் கொண்டு தான் கேட்டேன்.

இந்துவின் இதழ்கள் துடித்தன. விசாலமான கண்களினால் என்னை ஏறிட்டுப் பார்த்தாள். சிவந்த மாதுளை மொட்டு மடலவிழ்வது போல அவளுடைய அதரங்கள் மலர்ந்தன. மாதுளை முத்துக்கள் போல போல வென்று உதிர்வது போல, "யுகம் யுகமாய் உங்களுக்காகக் காத்திருப்பேன்!" என்றாள்.

இன்று வரை பாவம், எவ்வளவோ கஷ்டங்களைச் சமாளித்துக் கொண்டு, எனக்காகக் காத்திருக்கிறாள். சொல்ல முடியாத மனோ வேதனைகள், பொறுக்க முடியாத வறுமை, வக்கீல் பத்மநாபனின் கொடுமை இவைகளுக்கெல்லாம் ஈடு கொடுத்திருக்கிறாள். இதையெல்லாம் அறியாமல் நான் சுகமாக வாழ்ந்து கொண்டிருந்தேன். அதை நினைத்தாலே எனக்கு அவமானமாக இருக்கிறது. 'இந்து ஒரு வேளை வேறு யாரையாவது மணந்து கொண்டிருப்பாளோ?' என்ற எண்ணம் எழும் போதெல்லாம் என் நெஞ்சம் எத்தனை வேதனைப் பட்டிருக்கிறது. இதயத்தை நெருப்பில் போட்டு விட்ட மாதிரி இருக்கும். ஆனால் உடனே இந்துவின் குளிர்ந்த மதிமுகம் முன்னால் தோன்றி, 'நான் யுகம் யுகமாய்க் காத்திருப்பேன் என்று கூறினேனே. மறந்து விட்டீர்களா?' என்று கேட்பது போலிருக்கும். என் வேதனையும் தணிந்து விடும்.

நானும் இந்துவும் இதயம் கலந்து நெருங்கிப் பழக ஆரம்பித்தவுடனேயே பிரியும்படியும் நேரிட்டு விட்டது. திடீரென்று ஒருநாள் சீமை செல்ல உத்தரவு வந்து விட்டது என்று தலைமைப் பேராசிரியரிடமிருந்து தந்தி வந்தது.

தந்தியைப் பார்த்ததும் தங்க பாண்டியன் கலங்கிப் போனான். "துரை! உன்னை நம்பி யிருந்தேனே? ஒரு ஏற்பாடும் செய்ய வில்லையே. வக்கீல் நேற்று வந்து விட்டார் என்று சந்தோஷப் பட்டுக் கொண்டிருந்தேன். நீ போய் விட்டால் நான் என்ன செய்வேன்?" என்று அழமாட்டாத குறையாக அவன் கேட்டான்.

"நீ கவலைப்படாதே, பாண்டியா! இன்றே வக்கீலைச் சந்திப்போம். நான் போவதற்குள் என்னென்ன செய்ய முடியுமோ எல்லாவற்றையும் செய்து விடுவோம். இன்னும் நான்கு நாட்கள் இருக்கிறதே" என்றேன். சொன்னபடியே முழு மனத்துடன் காரியத்திலும் ஈடுபட்டேன்.

எனக்குத் தந்தி வந்த விஷயம் தெரிந்ததுமே சொக்கையா மாமா என்னிடம், "உனக்கு நான் ஒரு உபசார விருந்து கொடுக்க வேண்டியது தான்" என்று கூறினார்.

நானும், "விருந்து சாப்பிட எனக்கு ஒரு ஆக்ஷேபணையும் கிடையாது" என்று பதிலளித்தேன்.

இந்துவுக்கு விஷயம் தெரிந்ததும் ஒரே சோகமயமாகக் காட்சி தந்தாள். அவள் முகம் பனிப் படலத்தால் மறைத்தது போல் பொலிவிழந்து காணப்பட்டது. இன்னொரு முறை அவளுக்கு நான் என்றென்றும் மறக்க மாட்டேனென்று வாக்குறுதி கொடுத்தேன்.


எல்லோருக்கும் தெரியும்—
காற்றுப் புகாமல் நன்றாகப்
பாக் செய்யப் படுவதால்
ப்ரூக் பாண்ட் தேயிலை
களங்கமற்று மெத்தவும்
சுத்தமாக உங்களுக்குக்
கிடைக்கிறது
நீங்கள்
செலவழிக்கும் பணத்திற்கு
ப்ரூக் பாண்ட் தேயிலை
அதிகப்படியான, ருசியான
தேநீரை அளிக்கிறது
ஒவ்வொரு
நாளும் 24,90,496
ப்ரூக் பாண்ட் தேயிலை
பாக்கெட்டுகள் வாங்
கப்படுகின்றன
ஆகையால்தான்
மற்றெந்தத்
தேயிலையையும்
விட அதிகப்படியான
ஜனங்கள்
ப்ரூக்
பாண்ட்
தேயிலையையே
அருந்துகிறார்கள் !

## அத்தியாயம் 27

# பம்பாய் நகரம்

இந்துவிடம் நான் குங்குமத் துறையை விட்டுப் புறப்பட இரண்டு நாட்கள் இருக்கும் போது விடைபெற்றுக் கொண்டு விட்டேன். அதன் பிறகு இரண்டு நாட்களும் சந்திக்க முடியவில்லை. தங்கபாண்டியனும் நானும் திருநந்திபுரத்தில் வக்கீல் வீட்டிலேயே இருந்து விட்டோம். இரண்டொரு தடவை தங்கபாண்டியன் சில முக்கியமான தஸ்தாவேஜுகளுக்காகக் குங்குமத் துறைக்குப் போய் விட்டு வந்த போதுகூட. நான் வக்கீல் வீட்டிலேயே இருந்து பல விஷயங்களை அலசி ஆராய்ந்து கொண்டிருந்தேன்.

வக்கீலுடன் கலந்து பேசிய பிறகு தான் தங்கபாண்டியனுடைய தந்தை இறந்து போன பிறகு எவ்வளவு மோசடிகள் நடந்திருக்கக் கூடுமென்று தெரிய வந்தது. ஆனால் எதையும் நிரூபிக்கவே முடியாத நிலையில் இருந்தது. இரண்டாயிரம், மூவாயிரம் பெறுமானமுள்ள நன்செய் நிலங்களையெல்லாம் ஆயிரம், ஆயிரத்தைந்நூறு ரூபாய்க்கு விற்றதாகக் கணக்கு இருந்தது. அது சுத்தப் பொய்யாக இருக்க வேண்டுமென்று எங்களுக்குத் தெரிந்த போதிலும், அது விஷயமாக ஒன்றும் நடவடிக்கை எடுத்துக்கொள்ள முடியாமல் இருந்தது.

எத்தனையோவித தஸ்தாவேஜுகளைப் படித்து அர்த்தம் செய்து கொள்ள வேண்டியிருந்தது. ஜமீன் நிலங்களில் ஏறக் குறைய முக்கால் பாகம் விற்கப் பட்டிருந்ததைக் கண்டதும் எனக்கே ரத்தம் கொதித்தது. தங்கபாண்டியனைப் பற்றிச் சொல்லவே வேண்டாம்.

இத்தனைக்கும் பிறகு ஜமீன் காரியஸ்தரிடம் பேசிக் கொண்டிருந்த போது, மீதியிருந்த நிலங்களின் மீது கடன் வாங்கப் பட்டிருக்கிறது என்ற விஷயமும் தெரிய வந்தது. அதைக் கேட்டதும் எனக்கே அதிர்ச்சியாக இருந்தது.

வக்கீல் கூறியபடி ஜமீன் அதிகாரம் கைக்கு வருவதற்கு ஏற்பாடுகள் முதலில் செய்துகொள்வதென்றும், கடனை அடைக்கத் தங்க பாண்டியன் பொறுப்பாளி இல்லையென்று பின்னால் சட்ட பூர்வமாக வழக்குப் போட்டுத் தீர்மானித்துக் கொள்ளலாம் என்றும் முடிவு செய்தோம். தங்கபாண்டியனைப் பொறுமையாக இருக்கும்படி கூறினேன். சொக்கையாவும்! ஒன்றும் தகராறு செய்யவில்லை. நாங்கள் நேரில் அவரிடம் இவைகளைப் பற்றிப் பேசவில்லை. வக்கீலை விட்டே பேசும்படி சொன்னோம்.

வக்கீலிடம் அவர், "தங்கபாண்டியனுக்கு வயது வந்து விட்டது. ஆகவே எல்லாம் அவனைச் சேர வேண்டியது தானே. நானே எல்லா ஏற்பாடுகளையும் செய்வதாகத்தான் இருந்தேன். அவனும் தன்னுடைய பொறுப்புக்களை ஏற்றுக் கொள்ள வேண்டியதுதானே" என்று கூறினாராம்.

தங்கபாண்டியன் இதைக் கேட்டதும் சீறினான். "சொல்லமாட்டாரா பின்னே? இவர் கடன் வாங்கிச் செலவழித்தார். நான் அதை அடைக்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்டுதானே ஆக வேண்டும்?" என்றான்.

நான் அங்கே இருந்த போது எல்லா விஷயங்களையும் யோசித்து என்னென்ன செய்ய வேண்டுமென்று நாங்கள் முடிவு செய்தோமே தவிர, காரியம் உடனே நடைபெறவில்லை. அதற்குள் பிரின்ஸிபால் இன்னொரு தந்தியடித்து விட்டார். எல்லாம் சரியாக நடக்குமென்று எல்லோருக்கும் தோன்றியபடியால் நான் திருநந்திபுரத்தில் இருந்தே ரயிலேறிப் புறப்பட்டு விட்டேன்.

நான் ரயில்வே ஸ்டேஷனில் உட்கார்ந்திருந்த போது இந்துமதியைப் பார்க்காமல் போவது பெரிய குற்றமென்று பட்டது. ஆனால் என் பெட்டி படுக்கைகளைக் கொண்டு வரக் குங்குமத் துறைக்குச் சென்றிருந்த தங்க பாண்டியன் வந்து சேரவில்லை. கார் இருந்திருந்தால் போய் விட்டுக்கூட வந்திருப்பேன். ரயில் புறப்பட இரண்டு நிமிடம் இருக்கும் போதுதான் தங்கபாண்டியன் வந்தான். அவன் வந்திருக்காவிட்டாலும் நான் ரயிலேறிப் போயிருப்பேன். இரண்டு நாட்களில் அவனும் சென்னை வருவதாக இருந்தான்.

ரயிலில் போய்க் கொண்டிருக்கும் போதெல்லாம் இந்துவின் பீதி நிறைந்த முகம் என் கண் முன்னால் தோன்றி என்னை வதைத்தது. எதையோ கண்டு அவள் பயப்படுவது போலவும், என்னால் அவளுக்காக ஒன்றும் செய்ய முடியாமலிருப்பது போலவும் ஒரு எண்ணம் தோன்றி என்னைச் சித்திரவதை செய்தது. படித்தவனான நான் கூட அந்த மாதிரி எண்ணங்களுக்கு மனத்தில் கொஞ்சமும் இடம் கொடுக்கக் கூடாது

# ஹாஸ்யக்







என்று தீர்மானித்துக் கொண்டு அதை மறந்துவிட முயற்சி செய்தேன்.

நான் சென்னை சென்ற மறு நாள் மாலை ஒரு தந்தி வந்தது. 'சொக்கையா கொலை செய்யப்பட்டு இறந்து போனார்' என்று தங்கபாண்டியன் அடித்திருந்தான். எனக்கு அப்படியே புத்தி ஸ்தம்பித்து விட்டது என்று சொல்ல வேண்டும். தங்கபாண்டியனுடைய நிலையை எண்ணிய போது ரொம்பக் கவலையாக இருந்தது. அவர் இறந்து போனபடியால் அவர் பெயரிலிருந்த சொத்துக்களெல்லாம் சட்டபூர்வமாகத் தங்கபாண்டியனைச் சேரும். ஆகவே அவனே இதைத் தூண்டியிருக்கலா மென்று சந்தேகம் எழ இடமிருந்தது.

தங்கபாண்டியன் என்னை வழியனுப்புவதற்குப் பம்பாய் வரையில் வருவதாக இருந்தான். இதனால் அவன் வரவில்லை. ஆனால் சென்னைக்கு வந்து என்னுடன் இரண்டு நாட்கள் இருந்து என்னை ரயிலேற்றி விட்டுத்தான் திரும்பிப் போனான். எத்தனையோ கஷ்டங்களுக்கு இடையில் அவன் வந்ததை நினைத்து நான் பூரித்துப் போனேன். அவனை ஜாக்கிரதையாக இருக்கும்படி கூறினேன். நல்ல வேளையாக வக்கீல் நாங்கள் இருவரும் அன்று திருநந்திபுரத்திலேயே இருந்ததாகச் சாட்சி சொல்லுவார் என்ற தைரியம் எங்கள் இருவருக்கும் இருந்தது.

மற்றப்படி சென்னையில் எங்களுக்குக் கோலாகலமாகப் பொழுது போயிற்று. அருமை நண்பர்கள் பலரும் சூழ்ந்து கொண்டு உபசரித்தார்கள். என்னென்ன சாமான்கள் பிரயாணத்துக்கு வேண்டுமோ அவற்றை யெல்லாம் தேடித் தேடி எடுத்து வந்தார்கள்.

கோதண்டராமன் அவர்கள் எனக்குச் செய்ததை என்னால் மறக்கவே முடியாது. குளிர் காலத்துக்கு என்றும், கோடை காலத்துக்கு என்றும் இரண்டு இரண்டு உடுப்புகள் தைத்துக் கொடுத்தார். அதன் மதிப்பை நான் அப்போது அறிந்திருக்க வில்லை. பின்னால் சீமையில் நான் உடை தைக்க நேர்ந்த போதுதான், கோதண்டராமன் அவர்கள் எவ்வளவு செலவழித்திருக்க வேண்டும் என்று எனக்குத் தெரிய வந்தது.

# களஞ்சியம்

சாமா










அப்போது அவரிடமிருந்த நன்றி பல மடங்காகப் பெருகியது.

இத்தனைக்கும் இடையில் இந்துவுக்குக் கடிதம் எழுதினேன். அவளிடமிருந்து பதில் வரும் என்று எதிர்பார்த்துக் காத்திருந்தேன். புறப்படும் தினம் வரையில் பதில் வரவில்லை. ரொம்ப ஏமாற்றமாக இருந்தது. ஒரு வேளை தபாலில் தவறிப் போயிருக்கலாம் என்று எண்ணிக் கொண்டு புறப்பட்டேன். பம்பாய் சேர்ந்ததும் இன்னொரு கடிதம் எழுதினேன். பம்பாயில் இருந்த ஒரு வாரமும் இந்துவிடமிருந்து கடிதம் வரும் வரும் என்று எதிர்பார்த்து ஏமாந்தேன். பம்பாயின் அமர்க்களத்தில்கூட என்னால் அதை மறக்க முடியவே இல்லை.

என்னுடன் ஒரு வங்காள மாணவனும், இன்னொரு தமிழ் மாணவனும் வந்தார்கள். எங்களோடு வருவதாக இருந்த மற்ற இரண்டு மாணவர்கள் ஏதோ ஒரு காரணத்தால் அடுத்த கப்பலில் புறப்படுவதாகச் செய்தி வந்தது. என்னோடு வந்த தமிழ் நாட்டு மாணவன் ரகு ரொம்ப வேடிக்கையாகப் பேசிக் கொண்டும், சிரித்துக் கொண்டும் இருந்தான். ஆனால் வங்காளி மாணவனை அரவிந்த் நேர் விரோதமான பிரகிருதி. வாயைத் திறப்பதே இல்லை. பேசினாலும் இரண்டொரு வார்த்தைகள் நிறுத்திப் பேசுவான். நான் ரகுவோடு கலகலப்பாகப் பேசிக் கொண்டும், அரவிந்தோடு அளவாகப் பேசிக் கொண்டும் சமாளித்துக் கொண்டிருந்தேன். நல்லவேளையாக எனக்கு எப்படிப் பட்டவர்களோடும் பழகுவதற்கு என் வாழ்க்கை நன்றாகப் பழக்கமளித்திருந்தது.

பம்பாயில் நாங்கள் தங்கியிருந்த ஹோட்டலைப் பார்த்தவுடனேயே நான் மலைத்துப் போய் விட்டேன். ரகுவோடு அவன் தந்தை வந்திருந்தார். அவனுக்கு யாரோ உறவினர் இருந்தபடியால் அவன் அவர்கள் வீட்டுக்குச் சென்று விட்டான். நானும் அரவிந்தும் தான் ஹோட்டலில் ஒரே அறையில் இருந்தோம். நான் அவ்வளவு பெரிய ஹோட்டலை அது வரை பார்த்ததேயில்லை. அந்த ஆடம்பரங்களைப் பார்த்து வியந்த போதிலும், அவைகள் ரொம்ப

## கொடி என்ன பேசுது?

கொம்பில் உயரக் காற்றில் வீசும்
கொடி என்னென்ன பேசுது?

இமய முதலாய்க் குமரி வரையில்
இருக்கு மொழிகள் பேசுது.
சமய நூல்கள், மறையில் உள்ள
தர்ம மெல்லாம் பேசுது.

கங்கை நதியில், கடலின் அலையில்,
காடு மலையில், சோலையில்
பொங்கும் இயற்கைக் தேவெள்ளம்
பொழியு மிந்தக் கொடியிலே!

கோடி கோடி எளியமாந்தர்
குடும்ப நிலையைப் பேசுது
கோடி கோடி நாட்டு மக்கள்
குரலும் கொடியில் கேட்குது!

சிறிய குழந்தை கொஞ்சு மொழியை,
சிறந்த கலைஞர் இசைகளை,
பெரிய ஆலை ஒலியைச் சர்க்காப்
பெட்டி ஒலியைப் பேசுது!

பார தத்தின் சரித்திரத்தை,
பண்பின் உயர்வைப் பேசுது!
பார தத்தின் மக்கள் நம்மைப்
பணிகள் செய்யத் தூண்டுது!

கொம்பில் உயரக் காற்றில் வீசும்
கொடி இவற்றைப் பேசுது.

— தம்பி ஸ்ரீநிவாஸன்

அனாவசியம் என்றும் தோன்றிக் கொண்டிருந்தது. கப்பல் புறப்பட ஏழு நாட்கள் இருந்தபடியால் பம்பாய் நகரத்தைச் சுற்றிப் பார்க்க நேரம் இருந்தது. ரகு, அரவிந்த், நான் மூவருமாக எல்லா இடங்களையும் சுற்றிப் பார்த்தோம். பம்பாய் நகரமே இப்படி இருந்தால் லண்டன் மாநகரம் எப்படி இருக்கும் என்று நான் வியந்தேன். 'இவைகளை இந்து பார்த்தால் எவ்வளவு சந்தோஷப் படுவாள்? சீமையிலிருந்து திரும்பி வந்ததும் இந்துவுக்கு மாலையிட்ட உடனே, 'ஹனிமூ'னுக்கு இங்கே அழைத்து வரவேண்டும். எலிபெண்டா குகைகளுக்கு அழைத்துச் செல்ல வேண்டும். 'மலபார் ஹில்' தோட்டத்தில் உட்கார்ந்து நேரம் போவது தெரியாமல் இந்துவின் மதி முகத்தைப் பார்த்துக் கொண்டே இருக்கவேண்டும். 'மரீன் டிரைவில்' ஒரே மாதிரியான பொம்மைக் கொலு வைத்தமாதிரி இருக்கும் வீடுகளைக் காட்ட வேண்டும். சௌபாத்திக் கடற்கரைக்குக் காற்று வாங்க அழைத்துச் செல்லவேண்டும்.' இப்படியெல்லாம் பலவிதமான ஆசைக் கோட்டைகள் கட்டினேன்.

**ப**ம்பாய் நகரம் சேர்ந்தது முதல் என் இதயம் வேகமாகவே அடித்துக் கொண்டிருந்தது. ஒருகணம்கூட சும்மாயிருக்க முடியவில்லை. ஒரே பரபரப்பாக இருந்தது. இரவில் தூக்கம் வரவில்லை. கடல் கடந்து தூர தேசத்துக்குச் செல்லப் போகிறோம் என்று ஒரு மகிழ்ச்சி. நன்றாகப் படித்துத் தேற வேண்டுமே, தேறாவிட்டால் வாழ்க்கையே குட்டிச் சுவராகி விடுமே என்ற கவலை எல்லாம் என் நெஞ்சை அரித்துக் கொண்டே இருந்தது. என்ன நேருமோ, எப்படிப் பட்டவர்களுடனெல்லாம் பழகச் சந்தர்ப்பம் கிடைக்குமோ, என்றெல்லாம் அலை அலையாக எண்ணங்கள் நெஞ்சின் அடிவாரத்திலிருந்து எழுந்து எழுந்து வந்து கொண்டே இருந்தன.

நான் தன்னந் தனியாக எங்கேயோ செல்வதைக் குறித்து நானே கவலைப் பட்டுக் கொள்ளும்படி இருப்பது வேறு சில சமயம் வேதனையாக இருந்தது. ரகுவின் தந்தை அவனை 'அப்படி இரு! இப்படி இரு' என்று ஆயிரந் தடவைகள் கூறியதும், அவர் பட்ட கவலையும் என் வேதனையை இன்னும் மிகைப் படுத்தின. ஆனால் எனக்காக இந்துமதி கவலைப்பட்டுக் கொண்டிருப்பாள். நான் திரும்பும் வரையில் அவள் கவலைப் பட்டுக் கொண்டேதான் இருப்பாள் என்று தோன்றியதும் அந்த வேதனை சிறிது குறைந்தது.

எனக்கும் நிறையச் செல்வம் இருந்ததானால் இந்துவை மணந்து கொண்டு, அவளையும் அழைத்துக் கொண்டு போகலாமே என்று ஒரு சமயம் தோன்றிற்று. கற்பனை உலகில் வெகு நேரம் சஞ்சரிக்க என் மனத்துக்கு நான் ரொம்ப இடம் கொடுப்பதில்லை. அதனால் அந்த எண்ணங்கள் ஓடி ஒளிந்து கொண்டன.

ஆனால் கப்பலில் ஏறி 'டெக்கில்' நின்று கொண்டிருந்த போது, சங்கு ஊதிக் கப்பல் புறப்பட்ட போது என் அங்கங்களெல்லாம் பதறத் தொடங்கி விட்டன. கப்பலிலிருந்து குதித்து இந்துமதியிடம் போய்விட வேண்டும் என்ற ஆவேசம் எழுந்தது. இரத்தத்தில் ஒவ்வொரு துளியும், 'இந்துவை விட்டுப் போகக் கூடாது' என்று கதறியது. என்னுடைய உடலிலுள்ள ஒவ்வொரு அணுவும், 'இந்து! இந்து!! இந்து!!!' என்று அலறியது. (தொடரும்)




கந்தையானாலும் சரி, காசிப்பட்டானாலும் சரி, கசக்கியுடுத்துவதே தமிழ் நாட்டு மரபு. காவேரி பார் சோப் எல்லாவித துணிகளுக்கும் ஏற்றது. அதன் நுரை ஆடைகளின் நூலிழைகளிடையே ஊடுருவிப் பாய்ந்து, அழுக்கை அகற்றி, வெள்ளைத் துணிகளை மேலும் வெண்மையாகவும், வர்ண ஆடைகளை மேலும் பிரகாசமாகவும் செய்கிறது.

ஆடைகளுக்கு ஆயுளை அளிப்பது

**காவேரி**
**பார் சோப்**




மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிமிடெட்
மேட்டூர் அணை R. S. :: சேலம் ஜில்லா

*மானேஜிங் ஏஜெண்ட்ஸ்:* சேஷசாயி பிரதர்ஸ் லிமிடெட்

# அம்பிகா என் தோழி

**வா**ழ்க்கையில் எத்தனையோ உயிர்ச் சிநேகிதர்கள் கிடைக்கத்தான் செய்கிறார்கள். ஆனால் எவருடைய மனம் நம் மனத்தோடு ஒன்றுபடுகிறதோ அவர்கள் கொஞ்ச காலம் சென்றதும் தேடினாலும் காண முடியாதபடி எங்கேயோ சென்று ஒளிந்து கொள்கிறார்கள்.

என் உயிர்த் தோழி அம்பிகாவை மேற்சொன்னவர் வரிசையில் சேர்க்க வேண்டியதாயிற்று. நானும் அவளும் ராஜதானிக் கல்லூரியில் ஐந்து வருஷங்கள் சேர்ந்து படித்தோம். தொடக்கத்திலேயே உயிருக்கு உயிராய் ஒட்டிக் கொண்டோம் என்று சொன்னால் அது மிகையாகாது. பத்தரை மாற்றுத் தங்கக் குணம் அவள் குணம். பெண்கள் மத்தியில் எப்போதும் அவள் கல கல வென்றுதான் இருப்பாள். என்றாலும் அவளுடைய பெருந்தன்மை அடக்கம் முதலியவைகளை ஒருங்கே நான் யாரிடத்தும் கண்டதில்லை.

நிமிர்ந்த நன்னடை நேர் கொண்டபார்வையும்
நிலத்தில் யார்க்கும் அஞ்சாத நெறிகளும்
திமிர்ந்த ஞானச் செருக்கும் இருப்பதால்
செம்மை மாதர்.........

என்ற கவி பாரதியின் திறமான புலமை இப்படிப்பட்ட பெண்மணிகளைப் பற்றி எழுந்ததல்லவா!

இண்டர்மீடியட் தேறியதும் நானும் அம்பிகாவும் ஆனர்ஸ் வகுப்புக்கு இலக்கியத்தைப் பாடமாக எடுத்துக் கொண்டோம். இயற்கையிலேயே கூர்ந்த அறிவு படைத்த அம்பிகா வகுப்பிலும் மிகச் சிறந்த மாணவியாக விளங்கியதில் ஆச்சரியம் எதுவும் இல்லை.

புதுப்புது விஷயங்களை அறிந்து கொள்வதில் அவளுக்கு மட்டற்ற ஆவல். இல்லாதவர்களைக் கண்டால் இரங்கும் சுபாவம். நேர்மையற்ற நடத்தையைக் கண்டால் நெருப்பெனச் சீறும் குணம். இத்தியாதி காரணங்களால் தொடக்கத்திலிருந்தே அவளிடத்தில் எனக்கு உண்டான மதிப்பு நாளடைவில் உறுதிப்பட்டது.

நான்காவது வருஷத் தொடக்கத்தில் மாணவர்கள் காலேஜ் யூனியன் ஆதரவின் கீழ் ஒரு விவாதம் நடத்தினார்கள். விவாதத்துக்கு எடுத்துக் கொண்ட விஷயம் 'காதல் மணம்'. மாணவர்கள் 'காதல் மணம் கூடாது' என்ற கட்சி. மாணவிகள் 'காதல் மணம் வேண்டும்' என்ற கட்சி. பொருளுக்காக அல்லாமல் வம்புக்காக எடுத்துக் கொண்ட இந்த விவாதத்தில் அம்பிகா பெண்கள் கட்சியின் தலைவியாகவும் இருக்க ஒப்புக் கொண்டாள்.

குறிப்பிட்ட மாலையில் விவாதம் ருசிகரமான முறையில் நடந்தது. தொடக்கத்தில் வழக்கம் போல மாணவர்கள் குழப்பம் செய்யத்தான் செய்தார்கள். ஆனால் விவாதம் கார சாரமாக இயங்க ஆரம்பித்ததும் ஓர் ஆச்சரியமான அமைதி நிலவியது. நான் எதிர்பார்த்ததற்கு முற்றிலும் மாறாக அம்பிகா வெகு அழகாகப் பேசினாள். காதலைப் பற்றிப் பேசினாளா வீரத்தைப் பற்றிப் பேசினாளா என்று சந்தேகப்படும்படியாக விஷயங்களைச் சரளமாகவும், வரிசையாகவும் பேசிப் பலதடவை கரகோஷம் வாங்கிக் கொண்டாள் அம்பிகா. அன்று அம்பிகாவின் கட்சி வெற்றி கொண்டது என்று சொல்லத் தேவையில்லை. விவாதத்துக்குத் தலைமை வகித்த மாணவத் தலைவர் அவளுடைய பேச்சுத் திறனுக்கு ஒரு பெரிய புகழ்மாலை சூடிவிட்டு, இறுதியில் வருங்காலத்தில் அம்பிகா ஒரு பெரிய பேச்சாளியாகப் பெரும்புகழ் பெற்





வி. எஸ். சுப்பையா

னால் அதில் ஆச்சரியப்பட வேண்டியது ஒன்றும் இருக்காது என்றும் கூறினார்.

இதற்குப் பின்னர் அம்பிகாவின் பெயர் மாணவர்கள் மத்தியில் அதிகப் பிரசித்தம் அடைந்தது. எந்த விஷயத்துக்கும் அவளே மாணவிகள் பிரதிநிதி. அவளுடைய செயல் திறனும் கூர்ந்த அறிவும் பெண்கள் யாரையுமே பெருமிதம் அடையச் செய்தன.

ஒரு நாள் காலையில் அம்பிகா என்னிடம் மிக மெதுவாக, ''உன்னிடம் ஒரு பெரிய ரகசியம் சொல்லப் போகிறேன். நீ சிரிக்க மாட்டாயே'' என்று என் முகத்தைப் பிடித்துக் கொண்டு கொஞ்சலாய்க் கூறினாள்.

''ஏன் சிரிக்கக் கூடிய விஷயமாயிருந்தால் இரண்டு பேருமே சேர்ந்து சிரிப்போமே. நமக்குள் சிரித்துக் கொள்வதனால் நஷ்டம் ஒன்றும் ஏற்படாதல்லவா!'' என்றேன்.

''ஒன்றுமில்லை, இதோ இந்தக் கடிதத்தைப் பார். இதைத்தானே காதல் கடிதம் என்று சொல்கிறார்கள்!'' என்றாள்.

''நான் படிக்கலாமா இதை அம்பிகா!''

''நீ படித்துப் பார்ப்பதற்குத்தான் தந்திருக்கிறேன்'' என்று சொல்லி அந்தக் கடிதத்தை என்னிடம் கொடுத்தாள் அம்பிகா.

ஆனால் அவளுக்கென்று வரையப்பட்டிருந்த அந்தக் கடிதத்தைப் படித்துப் பார்க்க என் மனம் ஒருப்படவில்லை. எனவே, ''நான் படித்துப் பார்ப்பது இருக்கட்டும். அதிலுள்ள விஷயத்தைச் சுருக்கமாய்ச்சொல்லேன்'' என்றேன்.

''சுருக்கமாய்ச் சொல்வதானால் நான் இந்த ஆசாமியைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமாம். நான் வாழ்க்கைத் துணைவியாக அமையாவிட்டால் அவர் வாழ்க்கை சூன்யமாகிவிடுமாம்.''

''வாழ்க்கைத் துணை என்றெல்லாம் பெரிய குறள் படித்த பண்டிதரோ!''

''போயேன். அப்படித்தான் வைத்துக் கொள்ளேன்!''

இந்தச் சமயத்தில் மேலும் எங்கள் சம்பாஷணையைத் தொடர முடியாமல் முதல் வகுப்புக்கு இரண்டாவது மணியும் அடித்து விட்டது. அம்பிகா அவசர அவசரமாய் அதை மடித்துவைத்துக் கொண்டு புஸ்தகங்களை வாரிக் கொண்டு வகுப்பு அறைக்கு ஓட ஆரம்பித்தாள். நானும் அவளைப் பின் தொடர்ந்து சென்றேன். போகும் போதே அவள் மெதுவான குரலில், ''விளையாட்டுப் போலக்கூட நம் தோழிகள் யாரிடத்திலும் சொல்லி வைக்காதே. பெருத்த அவமானமாகப் போய் விடும்'' என்றாள்.



அவளுடைய காதல் சம்பவத்தைப் பற்றி மனம் விட்டு முதல் முதலாக என்னிடம் அவள் சொன்னது இதுதான்; கடைசித் தடவையும் இதுதான் என்று சொல்ல வேண்டும். ஏனெனில் அதன் பின்னர் அவள் அநேகமாய் மௌனியாய் விட்டாள் என்று சொல்லலாம். எப்பொழுதும் கலகல வென்று கவலை ஏதும் இல்லாமல் இருந்த அவள் முகத்தில் சோகத்தின் ரேகைகள் படர்ந்திருக்கக் கண்டேன். எதையோ பறி கொடுத்தவள் போல அசையாது உட்கார்ந்திருப்பாள். எதையும் ஒளிக்காமல் என்னிடம் மனம் விட்டுச் சொல்லிக் கொண்டிருந்த தோழி இதைப்பற்றி ஒன்றுமே சொல்லாதிருக்கவே, நானும் அதைப்பற்றி மேலும் எதுவும் கேட்பது அழகல்ல என்று இருந்து விட்டேன்.

மேலும், அம்பிகா ஒரு பெரிய செல்வந்தக் குடும்பத்தில் பிறந்தவள் என்ற வரைக்கும் தவிர, அந்த விவரமும் எனக்கு ஒன்றும் தெரியாது. சான்தோமில் கடற்கரை அருகிலுள்ள ஒரு பெரிய பங்களாவில் அவர்கள் வசித்தார்கள். பல தடவைகள் அவர்கள் வீட்டுக்கு நான் போயிருக்கிறேன். அம்பிகாவின் தாயாரிடம் என்னை அறிமுகப் படுத்தியிருந்தாள். அந்த அம்மாள் மிக மிக நல்ல குணசாலி என்பதும் தெய்வ பக்தி மிகுந்தவர் என்பதும் தோற்றத்திலேயே விளங்கிற்று. அம்பிகாவின் தந்தையை எட்டி நின்று பார்த்திருக்கிறேன். அதுதான் அப்பா என்று அவள் ஒரு தரம் சொன்னதாக ஞாபகம். இவ்வளவுதான்.

பரீக்ஷை முடிந்து ஒரு வாரத்துக்குள் என் கல்யாணத்துக்குப் பெற்றோர்கள் ஏற்பாடு செய்து விட்டார்கள். இதை நான் எதிர்பார்க்கவே இல்லை. உண்மையில் அன்று காலையில்தான் எனக்குத் தெரியும், கல்யாணத்தைப் பற்றிய பேச்சு வார்த்தைகள் முடிந்து விட்டது என்று. என் மனத்தை ஒளிக்காமல் சொல்ல வேண்டுமானால், மாப்பிள்ளை பெண்ணைப் பார்ப்பதற்கு வருவார் என்றும் என்னிடம் மாப்பிள்ளையைக் காட்டி என் சம்மதத்தைக் கேட்பார்கள் என்றும் எதிர்பார்த்தேன். ஆனால் அப்படியெல்லாம் ஒன்றும் இல்லை.

எனக்கு மிகவும் வருத்தம்தான். தங்கள் மகளுக்கு மாப்பிள்ளை கிடைத்த பெருமையைத் தங்களுக்குள்ளேயே சொல்லி மகிழ்ந்து கொண்டிருந்தார்களே அல்லாமல் என் பெண் மனத்தைப் பற்றி லவலேசமும் அவர்கள் கவலைப் பட்டதாகத் தெரியவில்லை.

அன்று மாடிக்குச் சென்றேன். அம்மாவிடம் அப்பா, 'யாருக்குத் தெரியும்! ஒரே காலேஜில் ஒரே வகுப்பில் படித்துக் கொண்டிருந்தவர்கள் இதைப் பற்றிப் பேசிக் கொள்ளாமலா இருந்திருப்பார்கள்!'' என்றார்.

''அப்படி எல்லாம் சொல்லாதீர்கள். பார்வதிக்கு அதெல்லாம் பிடிக்

காது. அவள் குணம் என் குணத்தைப் போல்..." என்றான்.

எனக்குத் திடுக்கிட்டது. என்னைப்பற்றித் தான் அவர்கள் பேசுகிறார்கள் என்றதும் என்னை அறியாமலேயே என் கால்கள் அப்படியே நின்று விட்டன.

அம்மா மேலும் சொன்னாள்: "'ஏன் உங்களைப் போல' என்று நினைத்தீர்களோ?"

"அதற்குச் சொல்லவில்லை, மங்களம்! பார்வதியைப் பற்றி அவன்தானே சொல்லி இருக்கிறான். எது எப்படியானாலும் பார்வதியைத் தான் கல்யாணம் செய்து கொள்வேன் என்று அவனுடைய அப்பாவிடம் முடிவாகச் சொல்லி விட்டானாம். இதை அவரே சொன்னார்."

"எப்படியோ பார்வதி அதிர்ஷ்டக்காரி. எல்லாம் நல்லபடியாக நடக்க வேண்டும்" என்று அம்மா சொன்னாள்.

"அவர், அவர்" என்ற கேள்விக்குத்தான் எனக்கு இன்னும் பதில் கிடைக்கவில்லை. அவர்கள் பேசிக் கொண்டிருந்திருந்து அவர் என்னுடன் படித்தவர் என்பது தெரிந்து விட்டது. ஆனால் யார் அவர் என்பதை நான் எப்படிக் கண்டுபிடிப்பேன்!

காலேஜில் படித்த ஐந்து வருஷ காலத்தில் ஒரு மாணவரிடத்தில் கூட நான் நன்றாய்ப் பேசியது கிடையாது. என்னை உற்றுப் பார்த்தவர் கூட யாரும் இல்லை. அப்படியிருக்க என்னைத்தான் கல்யாணம் செய்து கொள்வேன் என்று பிடிவாதமாகச் சொன்ன அவர் யார்!

நான் இவ்வாறு எண்ணிக் கொண்டு மேமாடி வந்த போது அங்கே அம்பிகா வந்து அமர்ந்திருக்கக் கண்டேன்..

"என்ன பார்வதி, ஆகாயத்தில் பறந்து வருவது போல் வருகிறாய்! என்ன சமாசாரம்! பரீட்சையில் தேறி விட்டதாக ரகசியமாகத் தகவல் கிடைத்திருக்கிறதா, என்ன!" என்றாள்.

உண்மையில் அப்பொழுதுதான் நான் தன் நிலையை அடைந்தேன்.

"அம்பிகா, என்ன சௌக்கியம்தானா! நானே வரவேண்டும் என்றிருந்தேன்."

"உம்... நீ எங்கே வரப் போகிறாய்! வீட்டில் பொழுதே போக மாட்டேன் என்கிறது. நீயாவது வருவாய் என்று தினம் நான் எதிர் பார்த்து இருந்ததுதான் மிச்சம்" என்றாள்.

ஆனால் ஏனோ அவள் சொன்னதை என் மனம் நம்ப மறுத்தது. அந்தச் சமயத்தில் அவளுடைய அந்தக் 'காதல'ரைப் பற்றி என் எண்ணம் ஓடியது. 'அவளுக்குக் கடிதம் எழுதிய அந்தக் காதலரைச் சந்திக்காமலா இருப்பாள்! ஏன்! அவர்களும் சீக்கிரத்தில் கல்யாணம் செய்து கொள்ளத்தான் போகிறார்கள்' என்று எண்ணினேன்.

"ஏன் அம்பிகா, உண்மையைச் சொல்! நான் வராமல் உனக்குப் பொழுது போகவில்லையா! ஏன் உன்னுடைய அவர் உன்னைத்தான் கல்யாணம் செய்து கொள்ளுவேன் என்று ஒற்றைக் காலில் நிற்கவில்லையா! உண்மையில் சொல்லப் போனால் அவர் வருவதற்குப் பதிலாக நான் எங்கு வந்து தொலைந்து விடப் போகிறேனோ என்றுதான் நினைத்துக் கொண்டிருந்திருப்பாய்."

பின்னர் எங்கள் உரையாடல் வேறு பல விஷயங்களில் திரும்பியது. அன்று மாலை சிற்றுண்டிக்கு அப்புறம் அம்பிகா சென்றாள். அதுதான் அவள் எங்கள் வீட்டுக்கு வந்த கடைசித் தடவை. அந்தச் சமயத்தில் என் கல்யாணத்தைப் பற்றி அவளிடம் ஏனோ நான் பேசவில்லை.

இதற்குப் பின் கல்யாணக் காரியங்கள் வேகமாக நடந்தன. நாட்களும் பறந்தன. மாப்பிள்ளை யார் என்றும் அறிந்து கொண்டேன். அதை அறிந்து கொண்ட பொழுது என்னைச்சொல்லமுடியாத ஆச்சரியம் கவ்வியது.

'அவரா என்னைத்தான் கல்யாணம் செய்து கொள்வேன் என்று பிடிவாதமாகச் சொன்னவர்! அவரா எனக்கு வரப் போகும் மணாளர்!' அதை நம்பவே என்னுடைய மனசு எளிதில் உடன்படவில்லை.

* * *

சுந்தரம் கல்லூரியில் சிறந்த மாணவர். காலேஜ் பொதுக் காரியங்களில் எல்லாம் அவருடைய பெயர் பிரசித்தம். கூட்டங்களில் நன்றாகப் பேசுவார். அவ்வளவுதான் எனக்கும் அவருக்கும் உள்ள தொடர்பு. எத்தனை எத்தனையோ தடவைகள் கல்லூரி வராந்தாவில் நான் அவரைக் கடந்து போயிருக்கிறேன். ஒரு சமயங்கூட என்னிடம் பேசியது இல்லை. ஏறிட்டுப் பார்த்தது கூட இல்லை.

இப்பொழுதுதான் அவர் உருவத்தை எண்ணிப் பார்த்தேன். எப்பொழுதும் நன்றாக ஆனால் ஆடம்பரம் இல்லாமல் உடை தரித்திருப்பார். அவருடைய எழுத்து நன்றாகவும் கம்பீரமாகவும் இருக்கும். வெய்யில் காலங்களில் அவர் கருப்புக் கண்ணாடி போட்டுக் கொண்டிருப்பார்.

நானும் அவரும் கல்லூரியில் சந்தித்திருக்கலாம் என்று நானே எண்ணியதில் தவறு இல்லைதான். இதை அவரிடம் சொல்லி, "ஒன்றும் அறியாத எனக்கு இப்படிப்பட்ட ஒரு பழி சேர்ந்திருந்தது உங்களால். உங்களோடு ஒன்றாகப் படித்த தோஷத்தால்!" என்று சொல்லவேண்டும் என்று மனத்துக்குள் நினைத்துக் கொண்டேன்.

கல்யாணப் பத்திரிகை அச்சடித்து வந்ததும் ஒன்றை எடுத்துக்கொண்டு அம்பிகா வீட்டுக்கு ஓடினேன், அவளிடம் நான் நேரில் கொடுப்பதற்கு. பல விஷயங்களைப் பற்றிப் பேசிவிட்டுக் கடைசியாக என் கல்யாணத்தைச் சட்டென்று ஏற்பாடு செய்து விட்டதைப் பற்றியும் சொன்னேன். சொல்லிவிட்டுத் திருமணப் பத்திரிகையை அவள் கையில் கொடுத்தேன். அம்பிகாவுக்கு உண்மையாகவே ஆச்சரியம்!

கல்யாணப் பத்திரிகையைச் சற்று இரைந்து படித்தாள். திருவளர் செல்வி பார்வதிக்கும், திருவளர் செல்வன் சுந்தரத்துக்கும் என்று படித்து விட்டு, "பார்வதி சுந்தரம்" என்று கையெழுத்துப் போடுவதற்கு எவ்வளவு பொருத்தமாக இருக்கிறது" என்று சொல்லிக் கலகலவென்று சிரித்தாள்.

"அது சரி பார்வதி. இந்தக் காதல் கல்யாணத்தைப் பற்றி என்னிடம் சொல்லவே இல்லையே!" என்றாள் மீண்டும்.

"காதலாவது, கத்திரிக்காயாவது! அம்பிகா, இவருடன் மருந்துக்குக்கூட ஒரு தரம் பேசி அறியேன். ஏன்! யாரோ ஒரு காதலர் உனக்குக் கடிதம் எழுதினார் என்று சொன்னாயே,

# உடனே—
# 'டெட்டாலை' எடு!




நம்மைச் சுற்றி எங்கும் பறவியிருக்கும் கொடிய வியாதிகளை உண்டாக்கக்கூடிய கோடிக்கணக்கான கிருமிகளில் சிலவற்றை நாம் பார்க்கக்கூடுமானுல் மிகச் சிறிய வெட்டுகளையோ, சிராய்ப்புகளையோ அலட்சியம் செய்ய மாட்டோம். குண்டூசி முனையின் அளவு போன்ற காயங்களிலும் கண்ணுக்குத் தென்படாத இக்கிருமிகள் விஷ நோய்களை பரப்பக் கூடும். உங்களையும் உங்கள் குடும்பத்தினரையும் 'டெட்டால்' உபயோகித்து காப்பாற்றிக் கொள்ளுங்கள். 'டெட்டால்' மிகவும் பத்திரமானதாகையால் டாக்டர்கள் அதை பிரசவ சமயங்களில் சிபார்சு செய்கிறுர்கள். ஏனெனில் இச் சமயத்தில் கர்பாசய மார்கத்தில் உண்டாகும் சிறிய வெட்டுக் காயமும் பிரசவ ஜுரத்தையும், இதர கொடிய துன்பங்களையும் நிரந்தரமான கர்பஹீனத்தையும் விளைவிக்கக்கூடும்.

**நோய் வரும் முன்பே**
**பாதுகாத்துக் கொள்ள**

# 'DETTOL'

டாக்டர்கள் உபயோகிக்கும் கிருமிநாசினி

**கையிருப்பாக வீட்டில் 'டெட்டால்' வைத்திருங்கள்:**
*சொந்த சுகாதாரத்திற்கும் வீட்டுத் துணிமணிகளை சுத்தம் செய்வதற்காகவும் 'டெட்டாலை' உபயோகியுங்கள் (நோயாளிகள் இருக்கும் அறையில் 'டெட்டாலை' தெளியுங்கள்) விஷ நோய்களை உண்டாக்கக்கூடிய துர்நாற்றம் தோன்றும் பொழுது தரைமேலும் சாக்கடையிலும் தெளியுங்கள்.*



ஓடியாடி விளையாடும் குழந்தைகளுக்கு வெட்டுக்காயங்கள், சிராய்ப்புகள் ஏற்படுவது சகஜமே. அவர்களுடைய வெட்டுக் காயங்களை 'டெட்டால்' கொண்டு கழுவுங்கள். 'டெட்டால்' மிகவும் பத்திரமானதும் இனிமையான வாசனையுள்ள ஓர் கிருமிநாசினி. உங்கள் குழந்தைகளுக்கு 'டெட்டால்' உபயோகிக்கும் முறையை கற்பியுங்கள். 'டெட்டால்' உபயோகித்து ஆரோக்கியத்தைக் காப்பாற்றிக் கொள்ளும் நல்ல பழக்கத்தை அவர்கள் வெகு சீக்கிரத்தில் அடைவார்கள்.



ஷவரம் செய்து கொள்ளும் நண்பர்கள் 'டெட்டாலை' சிறிதளவு சேர்த்துக் கொள்ளுங்கள். சிறிய வெட்டுக் காயங்களைக் கிருமி நோய்கள் சேராமல் அது பாதுகாக்கும். இரணமடைந்த தோலுக்கு ஆறுதல் அளிக்க 'டெட்டாலைக்' காய்க் கொப்பளியுங்கள்.




## இலவசம்

*'மாடர்ன் மைதஜீன் பார் விமென்' என்ற இலவசப் புத்தகத்தைப் பெற அட்லாண்டிஸ் (ஈஸ்ட்) லிட்., இலாகா எ.2 தபால் பெட்டி நெ. 664, கல்கத்தா-1 விலாசத்திற்கு எழுதுங்கள்.*

D4-2 AEL 191



ஜனவரி பதினைந்தேதி சென்னை பழைய வண்ணையம்பதியில் தமிழ்க் கலைக் கழகத்தார் தங்கள் கழகத்தின் ஐந்தாவது ஆண்டு விழாவையும் பொங்கல் திருவிழாவையும் சேர்த்துச் சிறப்பாகக் கொண்டாடினர். விழாவுக்குக் கழகத் தலைவர் திரு பி. வி. கோவிந்தசாமி தலைமை வகித்தார். விழாவில் ராஜாஜி கலந்து கொண்டு சிறப்பித்ததுடன், அருமையான சொற்பொழிவு நிகழ்த்தி விழாவுக்கு மேலும் பெருமையைத் தந்தார். வடசென்னையில் உள்ள பல்வேறு சங்கங்கள் ராஜாஜிக்கு மலர்மாலை சூட்டித் தங்கள் பக்தியையும் மரியாதையையும் தெரிவித்து மகிழ்ந்தன. கலைக் கழகத்தின் சார்பில் திரு கே. பழனிசாமி, ராஜாஜி அவர்களுக்கு வரவேற்புப் பத்திரம் வாசித்தளித்தார். திருவாளர்கள் சின்ன அண்ணாமலை, நாரண துரைக்கண்ணன், என். திருவேங்கடம், எம். நடராஜன், ஆ. ஏழுமலை, கே. ஏ. சிதம்பரம் ஆகியோர் பொங்கலின் பெருமையைப் பற்றிப் பேசினர். ராஜாஜி அவர்கள் பேசுவதையும், கழகத் தலைவர் திரு பி. வி. கோவிந்தசாமி அமர்ந்திருப்பதையும் படத்தில் காணலாம்.

அதைப்போல நினைத்துக் கொண்டாயோ! ஆனால் உன்னைச் சொல்லி என்ன பயன்! அப்பாகூட அம்மாவிடம் அப்படித்தான் சொன்னார். காலேஜில் இவருக்கும் எனக்கும் அறிமுகம் ஏற்பட்டிருக்கும் என்று எண்ணுவது சகஜந்தானே. நான் ஆயிரம் கோயில்களில் சத்தியம் செய்தாலும் என்னை நம்ப மாட்டார்கள் யாரும். நம்பாமல் போனால் போகிறார்கள். இனி மேல் அதைப்பற்றிக் கவலைப்பட்டு ஏது பிரயோஜனம்!'' என்றேன்.

"பார்வதி, யார் நம்பினாலும் நம்பா விட்டாலும் நான் நம்புகிறேன். விளையாட்டுக்குக்கூட இதைச் சொல்லக் கூடாதா!'' என்று லேசாகக் கடிந்து கொண்டாள். என்னை எட்டியிருந்து பார்த்து என்னையே தன் துணைவியாக ஏற்றுக் கொள்ளத் தீர்மானம் செய்து கொண்டவர் என்னிடம் ஒரு வார்த்தை சொல்லியிருக்கலாகாதா!

ஆனால் அது தவறு என்று அவர் எண்ணியிருக்கலாம். அவருடைய நேர்மையை மெச்சினேன். வாழ்த்தினேன். அதைப் பற்றி எனக்குச் சொல்ல முடியாத பெருமையும் ஏற்பட்டது.

"பார்வதி, இவ்வளவு சிறந்த கணவர் உனக்குக் கிடைத்ததற்கு என்னுடைய பாராட்டுதலை நீ இப்பொழுதே ஏற்றுக் கொள்'' என்றாள்.

"ஏற்றுக் கொள்கிறேன். ஆனால் கல்யாணத்துக்கு வருவாயல்லவா! உனக்குத்தானே முதன் முதலாக அழைப்பை எடுத்துக்கொண்டு ஓடி வந்திருக்கிறேன்.''

"முதன் முதலாக எனக்குத்தான் அழைப்புக் கொண்டு வந்திருக்கிறாய். அதைப் போல முதன் முதலில் பெண் பிறந்தால் என் பேரை வைக்க மறந்து விடாதே'' என்றாள், என்னை அன்புடன் தழுவிக் கொண்டு.

அம்பிகா சொன்னதை நான் மறந்துவிடவில்லை. என் முதல் பெண்ணுக்கு அம்பிகா என்ற பெயரைச் சூட்டி மகிழ்ந்தேன். ஆனால் அந்தச் செய்தியை அவளுக்குத் தெரிவிக்க அவள் அப்போது எங்கு இருந்தாள் என்ற விவரத்தை என்னால் அறிய முடியவில்லை.

என் கணவர் பரீட்சையில் முதல் வகுப்பில் தேறினார். அவர்கள் குடும்பத்தின் செல்வாக்குக்கும் அந்தஸ்துக்கும் அவர் முயன்றிருந்தால் அரசாங்கத்தில் ஒரு பெரிய உத்தியோகத்தில் அமர்ந்திருக்கலாம். அரசாங்க உத்தியோகத்தில் தன்னைப் பிணைத்துக் கொள்ள இஷ்டம் இல்லா விட்டால் சட்டம் படித்து வழக்கறிஞராகவாவது ஆகியிருக்கலாம். என் தந்தையும் அதைத்தான் சொன்னார். ஆனால் நான் முற்றிலும் எதிர்பாராத முறையில் கிராமத்துக்குப் போய் நிலபுலன்களைக் கவனித்துக் கொண்டிருக்கத் தீர்மானித்தார். இது எனக்கு மட்டுமில்லை, என் தந்தைக்கும், அவருடைய தந்தைக்கும் பெருத்த ஆச்சரியமாக இருந்தது. நான் அவருடைய அபிப்பிராயத்துக்கு எவ்வித மாறுபாடான எண்ணத்தையும் தெரிவிக்கவில்லை. உள்ளுக்குள் பட்டணவாசத்தை விட்டுவிட எனக்கு இஷ்டமில்லை. ஆனால் அதற்காக அவர் மனப் போக்கை மாற்ற முயலவில்லை. கிராமத்திலுள்ள எங்கள் வீட்டில் நவீன வசதிகளைச் செய்து கொண்டு வந்து விட்டோம்.

இதனால் அம்பிகாவின் தொடர்பு விட்டுப் போயிற்று. நான் எழுதிய இரண்டொரு கடிதங்களுக்கும் பதில் இல்லை.

அம்பிகாவின் நினைவு வந்த சமயங்களில் எல்லாம் அவளுடைய குணாதிசயங்களை எண்ணிப் பார்ப்பேன். அம்பிகாவுக்கு உயர்ந்த உத்தியோகத்தில் அமர்ந்து சேவை செய்ய வேண்டுமென்ற ஆசை இருந்ததை நான்

அறிவேன். அதற்காக ஒரு வேளை கல்யாணமே வேண்டாம் என்று சொல்லி விட்டாளோ என்று எண்ணினேன். அவளுக்கும் கடல் கடந்து மேல் நாடுகளுக்கெல்லாம் சென்று பல இடங்களைச் சுற்றிப் பார்க்க வேண்டுமென்ற ஆவல் உண்டு. அவ்வாறு சென்று விட்டாளோ! சிந்தித்துப் பார்த்தேன்: என்ன இருந்தாலும் நான் அவளுக்கு உற்ற தோழி ஆயிற்றே. அதை எல்லாம் அவள் எனக்கு எழுதிக் கொண்டிருந்தால் எவ்வளவு அழகாக இருக்கும்!

கல்லூரியில் ஒன்றாகப் படித்த ஐந்து வருஷ காலத்தில் நாங்கள் பழகிய விதமே தனி. உயிருக்கு உயிராய் இருந்தோம். நான் இல்லாமல் அவள் எங்கும் போகமாட்டாள். நான் வீட்டில் இருக்கும் நேரம் தவிர மற்ற நேரம் எல்லாம் அவளுடன் தான். அவள் எது சொன்னாலும் எனக்கு அது வேதவாக்கு. அவளுடைய வார்த்தைகளுக்கும் அபிப்பிராயங்களுக்கும் நான் அவ்வளவு தூரம் மதிப்பு வைத்திருந்தேன்.

"என் அம்மாவுக்கு நான் ஒரே பெண், பார்வதி! இன்னொரு பெண் குழந்தை இல்லையே என்று அம்மாவுக்கு ஒரு குறை. எனக்கும் ஒரு தங்கை இல்லையே என்று இருக்கிறது. நீ மட்டும் என் தங்கையாக இருந்தால்!" என்றாள் அவள் ஒரு நாள்.

"என் அம்பிகா, ஒன்றாய்ப் பிறந்தால் தானா! ஏன் உன் தங்கையாக என்னை ஏற்றுக் கொள்ளேன்" என்றேன்.

"அதற்குச் சொல்லவில்லை. நீ என் தங்கையாக இருந்தால் என் வீட்டிலேயே இருப்பாய் அல்லவா! அப்படியானால் எனக்கு எவ்வளவு சந்தோஷமாய் இருக்கும்!" என்றாள்.

அது உண்மைதான். இதற்குப் பின்னால் நான் பூரணமாகவே அவள் குணங்களில் ஒன்று பட்டு விட்டேன். என் நடை உடை பாவனைகள் எல்லாவற்றிலுமே என்னை அறியாமலேயே அவளைப் போலாகிவிட்டேன். எங்கள் சக மாணவிகள் கூட இதைக் கண்டு ஆச்சரியப்பட்டுச் சில சமயங்களில் எள்ளி நகையாடினார்கள். "அம்பிகாவும் பார்வதியும் இரட்டைக் குழந்தைகளாகப் பிறக்க வேண்டியவர்கள் தவறிப்போய் வேறு வேறாகப் பிறந்து விட்டார்கள்" என்று சொல்லிச் சிரிப்பார்கள்.

"அதனால் என்ன! அந்தக் குறையை நிவர்த்தி செய்து விடுவோம். இரண்டு பேரும் ஒரே நபரைக் கல்யாணம் செய்து கொண்டால் போச்சு" என்றாள் பார்வதி என்ற விஷமக்காரப் பெண்.

"இப்போது அவர்கள் இடம் இருக்கும் அந்யோந்யத்தையும் ஒற்றுமையையும் கெடுக்க அதுதான் சிறந்த வழி" என்று ஜானகி சொன்னதும் எல்லோரும் கலீர் என்று சிரித்தார்கள்.

இப்படி எங்கள் சக மாணவிகள் எள்ளி நகையாடியதெல்லாம் என் ஞாபகத்துக்கு வந்தது. இவ்வளவு ஒருமனப்பட்டு இருந்த எங்கள் மத்தியில் இப்பொழுது கடிதப் போக்குவரவுகூட இல்லாமல் இருந்ததை நினைக்க எனக்கே ஆச்சரியமாக இருந்தது.

* *

எங்கள் கல்லூரியின் நூற்றாண்டு விழாவுக்கு எனக்கும் என் கணவருக்கும் அழைப்புக்கள் வந்தன. அதைக் கண்டதும் நான் அளவற்ற சந்தோஷம் அடைந்தேன்.

பட்டணத்துக்கு வந்து விழாவில் கலந்து கொள்ள ஆயத்தமானேன்.

ஆனால் அவர் தமக்குச் சில முக்கியமான காரியங்கள் இருக்கின்றனவென்றும் அவைகளை விட்டுவிட்டு வர முடியாதென்றும் சொல்லிவிட்டார். ஆக நான் மட்டும் புறப்பட்டு வந்தேன்.

கல்வித் துறையில் நமது நாட்டில் நடந்த சிறப்பான விழாக்களில் எங்கள் கல்லூரி நூற்றாண்டு விழாவும் ஒன்று. நூறு ஆண்டுகள் அந்தப் புகழ்பெற்ற கலாசாலையில் கற்றுத் தேறியவர்களில், வாழ்க்கையில் உன்னத ஸ்தானம் அடைந்தவர்கள் பலர். நூறு ஆண்டுகளில் அதில் படித்த மாணவர்கள் பெயரை எல்லாம் திரட்டி, ஒரு புஸ்தகமாக வெளியிட்டிருந்தார்கள். அதில் என் பெயரைத் தேடிய பொழுது அந்த வருஷ மாணவர்களில் முதல் முதலாக இருந்த அம்பிகாவின் பெயர்தான் கண்ணில் பட்டது. உடனே அவளுடன் படித்த என் கலாசாலை ஞாபகங்கள் கொப்புளித்துக்கொண்டு வரத் தொடங்கின.

படித்தவர்கள் பெயர்களோடு அவர்கள் பட்டம், பரிசு, பதவி, விலாசம் எல்லாம் அதில் வெளியிட்டிருந்தார்கள். ஆனால் என் அம்பிகா வெறும் பெயரோடு மட்டும் நின்றாள்!

அவளைப் பற்றிய சிந்தனையுடனேயே விழாப் பந்தலுக்குச் சென்று ஓர் ஆசனத்தில் அமர்ந்தேன். இந்தச் சமயத்தில் அம்பிகாவை அங்கு பார்ப்பேன் என்று லவலேசமும் நினைத்ததில்லை. என் கண்கள்தான் ஒருவேளை என்னை ஏமாற்றுகிறதா என்றுகூட ஒரு கணம் அயர்ந்து போனேன். சாந்தமே உருவாகப் பந்தலில் ஒரு ஓரத்தில் என் தோழி அமர்ந்திருக்கக் கண்டேன். என்னை அறியாமலேயே என் கால்கள் அவள் பக்கம் என்னை இழுத்துச் சென்றன. என்னைக் கண்டதும் என்னை மார்புறத் தழுவிக் கொண்டாள். என் வாயிலிருந்து வார்த்தைகள் வெளிவரத் தயங்கின. "அம்பிகா" என்று மட்டும் மெதுவாகக் கூறினேன்.

"பார்வதி!" என்றாள் மெல்லிய குரலில்.

அதற்குமேல் எங்கள் இருவருக்குமே பேச முடியவில்லை. பந்தலை விட்டு அகன்று தள்ளிப் போய்ப் புல்தரையில் அமர்ந்தோம்.

அம்பிகா என் கையை அழுத்திப் பிடித்துக் கொண்டிருந்தாள். அவள் உடையும் தோற்றமும் அவள் வாழ்க்கையில் ஒரு மாறுதல் ஏற்பட்டிருந்ததைத் துலக்கி விட்டன.

என் தொண்டையைச் சரிப்படுத்திக் கொண்டு, "அம்பிகா, என்ன இப்படி மர்மமாக இருந்து விட்டாய்! நீ என்னை மறந்து விட்டாய் என்பதை இன்னும் என்னால் முடிவு கட்ட முடியவில்லை!" என்றேன்.

"என்னை மன்னித்து விடு, பார்வதி! என் உயிருக்கு உயிராய் இருந்த உன்னிடத்தில் சில அந்தரங்க விஷயங்களை அப்போது சொல்லச் சந்தர்ப்பம் ஏற்படவில்லை..." இவ்வாறு சொல்லும் போது அவள் குரல் கம்மிற்று.

நான் பதில் எதுவும் பேசவில்லை. அவள் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தேன். அம்பிகா மேலும் பேசலானாள்.

(அடுத்த இதழில் முடியும்)

## இந்த நவீன ஔஷதம் ஜலதோஷத்தை 2 வழிகளில எதிர்த்துப் போராடுகிறது!



உங்களுடைய குழந்தை படுக்கப் போகும் சமயத்தில் நீங்கள் அதனுடைய மார்பின்மேலும் தொண்டையின்மேலும் விக்ஸ் வேபோரப்பைத் தடவிவிட்டீர்களேயானால், அது இரு வழிகளில் நிவாரணம் பெறுகிறது! மூச்சு விடுவதை சுலபமாக்குவதன் பொருட்டும், இருமலை நிறுத்துவதன் பொருட்டும், உங்களுடைய குழந்தை இந்த மனோரம்மியமான தைலத்திலிருந்து கிளம்பும் ஆவிகளைச் சுவாசிக்கிறது. அதே சமயத்தில் வேபோரப் சருமத்தின் வழியாக உட்சென்று வேலை செய்து, மார்பிலுள்ள அடைசலையும் வலியையும் அகற்றுகிறது. இந்த இரு-வித வேலை ஜலதோஷத்தை அநேகமாக ஒரே இரவில் அகற்றுகிறது!




# விக்ஸ்

## வேபோரப்



புதிய சிறிய சைஸ்! புதிய குறைந்த விலை!

'விக்ஸ்வேபோரப்' ஒரு டிரேட் மார்க்.

NAS 104

## நறுமணம் விரும்புகிறவர்களுக்கு...

மைசூர் சந்தன சோப்பினால் ஸ்நானம் செய்வதே ஓர் அலாதியான இன்ப அனுபவம். அதன் மிருதுவான நுரை சருமத் துவாரங்களிலும் ஊடேறி சுத்தம் செய்து, சருமத்தை மழமழப்பாகவும் பளபளப்பாகவும் பட்டுப்போல் செய்கிறது. அதன் இன்பமூட்டும் ரம்மியமான மணம் உங்கள் தேக முழுவதும் பல மணி நேரம் நீடித்துப் பரிமளிக்கும்.

# மைசூர் சந்தன சோப்



## கவர்ன்மெண்ட் சோப் பேக்டரி, பெங்களூர்

இந்திய சோப், வாசனைப் பொருள்கள் உற்பத்தியாளர் சங்கத்தின் அங்கத்தினர்




பிராகதார் கோபால சர்மா, விளம்பர மற்ற ஒரு தேசபக்தர்; அவர் தம் வாழ்வில், தேசத்துக்காக உழைத்தது சொற்பமானாலும் அது நிலையாக நன்மை தரக் கூடியதா யிருந்தது.

தந்தை தமக்கு வைத்துச் சென்ற ரொக்கத் துடன், தஞ்சையை யடைந்து சர்மா ஒரு வீட்டை வாங்கிக் கொண்டார். அதன்பிறகு தான் அவர் காரியங்கள் ஆரம்பமாயின. பல வருஷ காலமாகப் பயிரிடப் படாமல் மேடிட் டுத் தரிசாகக் கிடந்த பல ஏக்கர் விஸ்தீரண முள்ள பூமியை மிகச் சொற்ப விலைக்கு வாங்கிக் கொண்டார் சர்மா. இதைக் கண்ட சிலர், 'சர்மாவுக்குக் கொஞ்சம் மூளைக் கோளாறும் இருக்குமோ?' என்று சம்சயித்தனர்.

வாங்கிய நிலங்களைச் சர்மா வெட்டுக் கூலி கொடுத்து வெட்டத் தொடங்கினார். இரவு, பகலென்று பாராமல் பல மாதங்கள் கஷ்டப் பட்டுப் பாடுபட்ட சர்மா முடிவில் எதிர் பார்த்த பலனையும் கண்டார். பலனைக் காணக் காணச் சர்மா உற்சாகங் கொண்டு, வெட்டுக் கூலிகளுடன் ஓயாமல் நின்று உழைத்துப் பண் படுத்திச் சில நூறு ரூபாய்கூடப் பெறாத அந்தத் தரிசான பூமியைத் தமது ஓயாத உழைப்பால் சில மாதங்களிலேயே பல ஆயிரம் ரூபாய் பெறும் பயிர் நிலமாகச் செய்து விட்டார்! அவரைப் பின்பற்றியவர்களுக்கு ஆலோசனை யும் சொல்லி அநேக விதங்களில் ஒத்தாசையும் செய்தார். ஏழை எளியவர்களுக்கு மொத்த மாகப் பணம் கொடுத்துப் பின் சிறுகச் சிறுக வட்டி குறைவாகப் போட்டு வாங்கிக் கொள் வார். ஏழை உழைப்பாளிகளுக்கும் பண ஒத்தாசை செய்து, பிறகு நெல்லாகவும், பயி ராகவும் வாங்கிக் கொள்வார். இப்படிப் பல வழிகளிலும் ஓயாமல் உழைத்துத் தம்மையும், தமது பணத்தையும், உயர்த்திக் கொண்ட துடன், தேச நலத்தையும் உயர்த்துவதற்கு அவர் அழகான வழி வகுத்தார்.

இப்படியெல்லாம் உண்மையாக உழைத்த சர்மாவைக்கூட இந்தப் பொல்லாத உலகம் சம்சயிக்கத்தான் செய்தது. ஒரு சமயம் ஒரு கூடைக்காரி, பானையிலே போட்டு வைத்த தால் பாசி பிடித்துப் போன பல காலணாக் களைச் செல்ல வைக்க முடியாமல் திண்டாடி னள். அனுதாபம் கொண்ட சர்மா, அதற் குரிய காசை அவளிடம் கொடுத்துக் கால ணாக்களை வாங்கிக் கொண்டு விட்டார். பிறகு காலணாக்களைப் புளியில் ஊறவைத் துத் தேய்த்துப் புதுக் காசாக மாற்றித் தம் சில்லறைச் செலவுகளுக்கு வைத்துக் கொண்டார். கூடைக்காரியும் அவரை வாழ்த்திக் கொண்டு தான் இருந்தாள். ஒரு நாள் அவள் தன் அத்தை மகளிடம் இதைச் சொன்னபோது அவள், "நல்லா நீ ஏமாந் துட்டே! அந்தப் பழைய காலணாக்களில் எட்டுக்கு ஒன்று தங்கமல்ல கலந்திருக்கும். ஐயர் அதைப் புளியில் ஊற வைத்துப் பிரித் தெடுத்து விற்றிருப்பார்" என்று சொல்லி வைத்தாள். பிறகு கூடைக்காரி சர்மாவைத் திட்டவே தொடங்கி விட்டாள்.

காலக்கிரமத்தில் சர்மாவுக்கு இரண்டு பெண்கள் பிறந்தவுடன் அவருடைய கொள் கைகள் விரிவடைந்தன.

'ஒவ்வொரு பெண்ணுக்கும் ஒரு ஜதை வைரக் கம்மல், மூன்று பவுனில் மூன்று ஜதை கைக்கு வளையல்கள், பத்துச் சவரனில் கழுத்துக்குச் சங்கிலி. ஆடம்பரச் செலவுகள் இல்லாத கலியாணம். வரதக்ஷிணை என்ற பேச்சே அவரிடம் நடக்கக்கூடாது. பின்னால் அவர் பாடுபட்டுக் கட்டிய இரு வீடுகளையும், பண்படுத்திக் கண்ணுக்கிய இரண்டு வேலி நிலத்தையும், ஆளுக்கு ஒரு வேலி நிலம், ஒரு வீடு என்று வைத்து விடுவது. இவைகள் தமக்குப் பின்னால் பெண்களைச் சேரும். தமது மனைவி தன் நகைகளை விற்று ரொக்கமாக்கிக் கொண்டு இரு பெண்களிடத்திலும் மாறி



மூன்றாவது திருமந்திர மகாநாடு ஜனவரி 11-ந் தேதியிலிருந்து 13-ந் தேதிவரை திருவாவடுதுறையில் திரு தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் அவர்களின் தலைமையில் வெகு விமர்சையாக நடந்தேறியது. விழாத் தலைவர் பேசுவதையும், திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத் தலைவர் வீற்றிருப்பதையும், விழாவுக்கு வந்திருந்தவர்களையும் மேலேயுள்ள படத்தில் காணலாம்.

மாறி 'இருக்க வேண்டியது. தமது நிலத்தையும், பெண்களையும் தம்மைப் போலவே கண்ணாகக் கவனித்துக் காக்கக்கூடிய கருத்துள்ள பையன்களாகத் தேடிப் பிடித்துத் தம் மாப்பிள்ளைகளாக்கிக் கொள்ள வேண்டும்.' இதுவே சர்மாவின் திட்டம்.

இத்திட்டத்தின்படி மூத்த மாப்பிள்ளையைத் தேட இரண்டு வருஷம் பெரு முயற்சி எடுத்துக் கொண்டார் சர்மா. இப்போதுதான் சர்மாவின் திட்டங்கள் ஆட்டங் காணத் தொடங்கின. சர்மாவின் பெரும் முயற்சிக்குப் பிறகு குதிர்ந்த மாப்பிள்ளையும் சர்மாவின் முழு நம்பிக்கைக்குப் பாத்திரமாக இருக்கவில்லை. கல்யாணத்திலும் சில நூறு ரூபாய்கள் சர்மாவின் திட்டத்தை மீறிச் செலவாகி விட்டன. அத்துடன் 'ஆயிரக்கணக்கான ரூபாய் சீர் வரிசைகளுடனும், நிலம், வீடு இவைகளுடனும் வரும் மனைவியான தமது பெண்ணை மாப்பிள்ளை மிக உயர்வாக வைத்துக் கொள்வான்' என்று எதிர்பார்த்திருந்த சர்மா முற்றிலும் ஏமாற்றமே அடைந்தார்.

பல நல்ல குணங்களால் முன்னுக்கு வந்த சர்மாவிடத்தில் ஒரு கெட்ட குணமும் இருந்தது. அதை அவர் கெட்ட குணம் என்று ஒப்புக் கொள்வதில்லை. பிறந்தவுடன் தாயையும், பின்னர் தந்தையையும் இழந்து வளர்ந்த சர்மாவுக்குப் 'பெற்றவர்கள்' என்று பாசப்படும் மகனது கடமை எப்படிப்பட்டது என்பதும் தெரியாது. பின்னும் அவருக்குப் பிள்ளையும் இல்லை. ஆகவே பிள்ளையைப் பெற்று வளர்த்து ஆளாக்கும் பெற்றோர்கள் பின்னால் அந்தப் பிள்ளையிடத்தில் எவ்வளவு எதிர்பார்ப்பார்கள் என்பதை அறிந்து கொள்ள—பிறர் சொன்னால் புரிந்து கொள்ள, அவரால் முடியவில்லை. அதனால், 'ஒவ்வொருவனும் மனைவி, குழந்தைகளுக்குச் செய்வதுதான் கடமை. கல்யாணமானவுடன் மற்ற உறவுகளை உதறிவிட வேண்டும்' என்ற அவரது வாதந்தான் மாப்பிள்ளையோடு ஒத்துப் போக முடியாமல் செய்தது. அதனால் அவர் தமது எதிர்காலத் திட்டங்களையும் சரியாக நிறைவேற்றுவான் என்று அந்த மாப்பிள்ளையிடத்தில் நம்பிக்கை கொள்ள முடியாமல் தவித்தார். கடைசியாக இரண்டாவது மாப்பிள்ளையையாவது தம் திட்டத்தைப் பாதுகாத்து நிறைவேற்றும் திறமைசாலியாகப் பார்த்துப் பிடித்து விடுவது' என்ற எண்ணத்துடன் மனசைத் திடம் செய்து கொண்டார்.

அவரது இரண்டாவது பெண் வனஜாவுக்கு வயது அப்போது பன்னிரண்டுதான். அப்போதிருந்தே அவர் வரனைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்கினார். அவரது சிந்தனையில் முதலிடம் பெற்றவன், அவர் மனைவியின் அத்தை பிள்ளை ஜகதீசனே. ஜகதீசனின் தாய் மங்களத்துக்கு மூன்று பிள்ளைகளும் இரண்டு பெண்களும் இருந்தனர்.

முதல் இரண்டு பிள்ளைகளுக்கும் விவாகமாகி விட்டது. ஜகதீசனின் தந்தை அகாலத்தில் மரணமடைந்து விட்டதால் தாய் மங்களம் ஒருத்தியாகவே குடும்பத்தைப் பல கஷ்டங்களுக்கிடையே முன்னுக்குக் கொண்டு வந்தாள். அவ்வப்போது கோபால சர்மாவின் உதவியையும், ஆலோசனையையும் பெற்றுக் கொள்வாள். சர்மாவும், அந்தக் குடும்பத்தினரிடத்தில் நல்ல மதிப்பும், பிரியமும் வைத்திருந்தார். ஜகதீசனுக்கு வனஜாவைக் கொடுக்கலாம் என்றிருந்த தம் அபிப்பிராயத்தை வெளியிலும் பிரஸ்தாபித்து வைத்தார். இந்தப் பிரஸ்தாபம் அத்தை மங்களத்தின் சம்மதத்துடன் வளர்ந்து விரிவடைந்தது.

இப்படிச் சர்மாவின் பிரஸ்தாபம் இதழ் விரிந்து மலர்ந்தபோது, அதன் மணம் சர்மாவின் பெண் வனஜாவையும், ஜகதீசனையும் மெல்லத் தொட்டது. அன்று முதல் அவர்களும் தங்கள் உள்ளத்தில், அன்பைப் பதியனிட்டு வளர்க்கத் தொடங்கினார்கள். அவர்கள் வளர வளர, அவர்களது உள்ளத்தில் ஊன்றிய அன்பும் இணைந்து வளர்ந்தது.

கடந்த சில வருஷங்களில் நல்ல உயரமாக வளர்ந்துவிட்ட ஜகதீசனது அழகிய உருவம் பார்ப்பவரது கண்களைப் பரவசமுறச் செய்தது. சிவந்த அவனது மேனியும், கருத்தடர்ந்த அவனது கிராப்புத் தலையும், கள்ளமற்றுப் பிரகாசிக்கும் அவனது கருநீல விழிகளும், அவ்விழிகளைத் தாங்கி நிற்கும் அவனது வசீகரமான முகமும் வனஜாவின் உள்ளத்தில் தீட்டிய ஓவியமாகப் பதிந்து விட்டது.

வனஜாவும் வசீகரிக்கும் எழிலுடன் வளர்ந்து விட்டாள். ஜகதீசனது உயரத்துக்கு ஈடாக உயர்ந்து விட்ட அவளது பொன்கொடி போன்ற எழில் உருவம் ஜகதீசனது உள்ளத்துக்கு ஓயாத தொல்லை கொடுத்திருக்கும் என்பதும் நிச்சயம். நிலவைப் பொழிந்த அவளது வதனத்திலே மின்னி மிதக்கும் கருவிழிகளின் கவர்ச்சி ஜகதீசனைக் கவர்ந்து கொண்டு விட்டதிலும் வியப்பில்லை.

படிப்பை முடித்துக் கொண்ட ஜகதீசன் சென்னையில் கம்பெனியொன்றில் வேலைக்கு அமர்ந்து விட்டான். தருணத்தை எதிர்பார்த்துக் காத்திருந்த கோபால சர்மாவும் விவாகத்துக்கான ஏற்பாடுகளை மிகத் தீவிரமாகச் செய்யத் தொடங்கினார்.

அன்று ஜகதீசன் சென்னையிலிருந்து வந்திருப்பதை மறந்த சர்மா, எல்லாரிடமும் தமது ஏற்பாடுகளைச் சொல்லி முகூர்த்த நாளையும் குறித்துக் கொண்டு வந்து விடுவோம் என்று புறப்பட்டார். தம்மிடத்தில் அதிக மதிப்பு வைத்துள்ள அக்குடும்பத்தார் தம் திட்டங்களுக்கு ஆக்ஷேபணை எழுப்பாமல் ஒத்துக் கொண்டு விடுவார்கள் என்ற முழு நம்பிக்கையுடன் சென்றார் சர்மா. வீட்டுக்குள் நுழைந்ததுமே எல்லார் முன்னும் தம் ஏற்பாடுகளைச் சொன்னார். அவர் எதிர்பார்த்தபடியே அத்தை மங்களமும், மற்றப் பிள்ளைகளும் ஆட்சேபம் எதுவும் சொல்லாததுடன் தங்கள் சந்தோஷமான சம்மதத்தையும் கொடுத்து விட்டனர். ஆனால் சர்மா சற்றும் எதிர்பாராத முறையில் ஜகதீசன்தான் ஒரு ஆக்ஷேபணையைக் கிளப்பி விட்டான்.

நிமிர்ந்து உட்கார்ந்து ஜகதீசன், "நீங்கள் சொன்ன திட்டப்படி, பணம் முழுதும், நகை புடவை, பாத்திரம் என்று உங்கள் பெண்ணுக்கே செய்து கொள்கிறீர்கள். பையனுக்கு, 'டிரஸ்' ஸுக்கு என்று நீங்கள் கொடுப்பதாகச் சொல்லும் பணமும் மிகக் குறைவு" என்று நிறுத்தினான்.

ஜகதீசனின் தாய், தமையன் உள்பட அனைவருமே திடுக்கிட்டு விட்டனர்! 'அன்றலர்ந்த தாமரையைப் போல சதா சிரித்த முகத்துடன் இருக்கும் அந்தக் குழந்தைப் பையனா இவ்வளவு அழுத்தமாகப் பேசுவது!' என்று எல்லோரும் திகைத்து விட்டனர். சர்மாவோ, 'பேசுவது ஜகதீசன்தானா' என்று நம்ப முடியாமல் திகைத்தார்.

ஜகதீசன் தொடர்ந்து சொன்னான்: "உங்கள் பெண்ணை மணந்த மறுதினம் முதல் என் சுகம், சௌகரியம், வருவாய் யாவற்றையும் அவளுடன் சமமாகப் பங்கிட்டுக் கொள்ள வேண்டும். அது போலவே கல்யாணப் பரிசாக நீங்கள் அளிப்பவைகளும் பெறுமானத்தில் இருவருக்கும் சம நிறையாக இருக்க வேண்டும் என்பதே என் விருப்பம். அவ்வளவு சமனாகச் செய்ய நீங்கள் சம்மதிக்காவிடில் 'டிரஸ்' பணம் தவிர ரூபாய் இரண்டாயிரம் ரொக்கமாக என் கையில் கொடுத்து விட வேண்டும். அந்தப் பணத்துக்கு என்ன செய்து கொள்வது என்பதையும் என் இஷ்டத்துக்கு விட்டுவிட வேண்டும்" என்று சொல்லி நிறுத்தினான்.

சர்மா திகைப்பு நீங்கித் திடுக்கிட்டார். இது நாள்வரை தன் முன் வந்து பேசக்கூடக் கூச்சப்படும் ஜகதீசனா தன்னிடம் இவ்வளவு பேசுவது! சர்மா கலக்கமடைந்தார். அதுவும் ரூபாய் இரண்டாயிரம்! நினைக்கும் போதே சர்மாவுக்கு மயக்கமாக வந்தது. குழப்பத்திலும், ஆலோசனையிலும் ஆழ்ந்துபோன சர்மா மெள்ளச் சமாளித்துக் கொண்டு நிமிர்ந்தார். சிறு நம்பிக்கையால் மீண்டும் சொன்னார்.

"இது நான் எதிர்பாராத விஷயம். அதோடு என் கணக்குக்கு மேல் நூறு, இருநூறு என்றால் சமாளித்துக் கொள்வேன். ஒரேயடியாக இரண்டாயிரம் என்றால் என்னால் முடிந்த அளவு கூட்டித் தருகிறேன். மேலும், முதல் பெண்ணுக்குச் செய்ததைவிட அதிகமாகச் செய்தால் அந்த மாப்பிள்ளையின் மனஸ்தாபமும் ஏற்படும். இவைகளையெல்லாம் நீ நன்றாக யோசித்து எனக்கு முடிவு சொல்லு" என்று கூறினார்.

விஷயத்தைக் கவனமாகக் கேட்ட ஜகதீசன், "உங்கள் கணக்குக்கு மேல் போகவும் வேண்டாம். மாப்பிள்ளையின் மனஸ்தாபத்தையும் ஏற்படுத்திக் கொள்ள வேண்டாம். உங்கள் பெண் வனஜாவின் பூரணமான சம்மதத்துடன் அவளது வைரத் தோட்டை நிறுத்திக் கொண்டு ரூபாய் இரண்டாயிரம் எனக்குக் கொடுங்கள். எனக்கு மனைவியாக வருபவள் வைரத்தோடு அணிந்துதான் ஆக வேண்டும் என்பது எனக்கு இல்லை" என்றான் உறுதி நிறைந்த குரலில்.

சர்மாவுக்குத் தம் முன்னுள்ள பொருள்கள் யாவும் தட்டாமாலை யாடுவதுபோல் இருந்தன. அவர் வகுத்த திட்டமும், நம்பிக்கையும் நிலை குலைந்து விட்டதால் ஏற்பட்ட மன வருத்தத்தை அவரால் தாங்க முடியவில்லை. இது வரை கலியாணப் பையனை இவ்வளவு கண்டிப்பாகப் பேசியதை அவர் கண்டதில்லை. அதனால், நினைக்க நினைக்க அவரால் இதைத் தாங்கவே முடியவில்லை. அதற்குமேல் அங்கு உட்கார்ந்திருக்கவும் அவருக்குப் பிடிக்கவில்லை. ஆகவே அவர் மெள்ளச் சமாளித்துக் கொண்டு எழுந்து நடந்தார் தம் இல்லத்துக்கு.

நினைத்ததை நடத்தி வெற்றி காணும் சர்மா நீண்ட நாட்களாக முடிபோட்டிருந்த கலியாணம் நின்றதில் ஊரே வியப்பில் ஆழ்ந்து விட்டது. அதோடு, 'கபடமற்றுச் சிரித்துப் பேசும் குழந்தைப் பையனா ஜகதீசனே கலியாணம் நிற்கக் காரணமானவன்!' என்பதை யாருமே நம்பவில்லை.

சர்மா தீர்மானித்து விட்டார், 'ஜகதீசனே நேரில் வந்து அந்தப் பண விஷயத்தை விட்டுக் கொடுப்பதாகச் சொன்னாலொழிய இந்தக் கலியாணம் இல்லை' என்று. ஜகதீசனும் சளைக்கவில்லை. 'வனஜா வைரத்தோட்டை விட்டுக் கொடுக்க முன் வராதவரையில் இந்தக் கலியாணம் இல்லை' என்று சொல்லிப் புறப்பட்டு விட்டான். அவன் சென்னை சென்றவுடன், சென்னையிலிருந்து அவனைப் பம்பாய் கிளைக் கம்பெனிக்குப் பிரமோஷனில் மாற்றியிருப்பதை அறிந்தான். அன்றே அதை ஒப்புக் கொண்டவன் பம்பாய்க்குச் சென்று விட்டான்.

இடையில் இரண்டு வருஷங்கள் எவ்வித மாறுதலும் நிகழாமல் சென்று விட்டன. ஆயினும் வதந்திகள் சில எழுந்து அமுங்கத்






# இருமலை
# பெர்ட்டுஸின்
"டெஷ்னர்"
# நிறுத்துங்கள்



infa

எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கிறது.

இடாபா லிமிடெட், ஷான், லீசென்ஸ்டன் ஸ்விஸ் கஸ்டம் அண்டு இகனமிக் டெரிடெரி இவர்களின் அனுமதியின் பேரில்

இன்பா லிமிடெட் தபால் பெட்டி 1041, பம்பாய்-1 இவர்களால் இந்தியாவில் தயாரிக்கப்பட்டது.

தான் செய்தன. ஜகதீசனின் தாயா ரிடத்தில் சிலர், 'சர்மா வேறு வரன் பார்க்கிறார்' என்றும், சர்மாவிடத் தில் சிலர், 'ஜகதீசனே வேறு பெண் பார்க்கும்படி அவன் அம்மாவுக்கு எழுதியிருக்கிறான்' என்றும் வதந்தி களைக் கிளப்பி விட்டார்கள். ஆயி னும் இரு குடும்பத்தாரும் அசைந்து கொடுத்தவர்கள் அல்ல. ஜகதீசனை விட நல்ல வரன் கிடைப்பது மிகக் கடினம் என்பதை உணர்ந்திருந்த சர்மா, எதிர்பார்த்திருந்தாரே தவிர, வேறு வரன் பார்த்தவரல்ல. அது போல் ஜகதீசன் வீட்டாரும் அவ னுக்கு வேறு பெண் பார்ப்பது என் பதை நினைக்கக்கூட இல்லை. இப் படியே இரண்டு வருஷங்கள் ஓடின.

அன்று சர்மா கடைத் தெருவி லிருந்து திரும்பிக் கொண்டிருந்த போது, பக்கத்தில் பழகிய குரலாகக் கேட்கவே சட்டெனத் திரும்பிப் பார்த்தார். பார்த்தவர் திகைத்தார். ஜகதீசனே அங்கு நண்பனொருவ னுடன் பேசிக் கொண்டிருந்தான். அவர் பக்கம் திரும்பிய ஜகதீசன், "ஓ! அத்திம் பேரா! சௌக்கி யமா!" என்றவன் தன் நண்பனிடம், "இவர் என் மாமாவின் மாப்பிள்ளை. 'எங்கள் குடும்பத்துக்குப் பல விதங் களிலும் உதவி செய்பவர்' என்று நான் சொல்வேனே, அவர்தான் இவர்" என்று அறிமுகம் செய்து வைத்தான். அவன் குரலில் நன்றியுணர்ச்சி நிரம்பி யிருந்தது.



பக்திச் சுவை மிகுந்த பாசுரங்களான திருப்பா வையை 16-12-55 முதல் தொடங்கி, சென்னை புரசை வாக்கம் திருமதி முத்தைய செட்டியார் பெண்கள் உயர் நிலைப் பள்ளியில், மேற்படி பள்ளியின் தலைமைத் தமிழாசிரியரான ஸ்ரீ கேதாரீசுவர சர்மா அவர்கள் 13-1-56 வெள்ளிக்கிழமை யன்று பூர்த்தி செய்தார். அன்று பிற்பகல் இரண்டு மணிக்கு ஸ்ரீ ஆண்டாள் திருக்கல்யாண மகோற்சவமும் சிறப்பாக நடை பெற் றது. விழாவுக்குத் தலைமை வகித்த ஸ்ரீ "லோசமாஸ்" அவர்கள் பாசுரப் போட்டியில் வெற்றி பெற்ற மாணவி களுக்குப் பரிசுகள் வழங்கினார்.

தமது திகைப்பைச் சமாளித்துக் கொண்ட சர்மா, "நீ பம்பாயிலிருந்து எப்போது வந் தாய்!" என்று கேட்டார்.

"ஆபீஸ் விஷயமாகச் சென்னைக்கு வந்தேன். அப்படியே அம்மாவைப் பார்க்க இன்று காலை தான் இங்கு வந்தேன். நாளை இரவு புறப் பட்டு விடுவேன்" என்று ஜகதீசன் பதி லளிக்கவே, சர்மா விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டார்.

வீட்டில் நுழைந்தவுடன் சர்மா விஷயத்தை மனைவியிடம் சொன்னவர், "இன்னமும் அவன் பிடிவாதமாகவே இருப்பான் போல் இருக்கி றது" என்றதுடன் நிறுத்திக் கொண்டார்.

வெளிப்படையாக அவர் நிறுத்திக் கொண் டாரே தவிர உள்ளுக்குள் விஷயம் நிற்காமல் ஓடிக் கொண்டுதான் இருந்தது. 'என்னை அறி முகப்படுத்திய அவனது குரலில் என்ன நன்றி யுணர்ச்சி! பம்பாய் வாசத்தால் அவனிடத் தில் எவ்வித மாறுதலும் காணவில்லை! அதே அடக்கம்; வசீகரம்; அன்பு. இம்மாதிரிப் பையன் கிடைப்பது அரிது. இரண்டு வருஷங் களுக்குப் பிறகு வந்திருக்கிறான். சந்தர்ப்பத்தை நழுவவிட்டால்......! இப்படி ஓடிய சர்மாவின் எண்ணம் நிற்காமல், வைரத் தோட்டையும், ஜகதீசனையும் திராசிலிட்டு எடை பார்க்கக் கூட ஆரம்பித்து விட்டது.

அன்று இரவு கழிந்து பொழுது விடிந்தது. அன்று இரவு ஜகதீசன் புறப்பட்டு விடுவான். சர்மாவின் மனம் படபடத்தது. 'அந்தப் பையனுக்குத்தான் என்ன உறுதி! பிடிவாதம்!' இப்படி எண்ணிய சர்மா, மறுபடியும், 'ஏன் நாம்தான் விட்டுக் கொடுத்து விடுவோமா! சே! சே!! அந்தச் சிறு பையனுக்குப் பணிந்தா போவது! இது எப்படிப் பணிவதாகும்! நம் பெண்ணின் நல்ல வாழ்வுக்காக விட்டுத்தான் கொடுக்க வேண்டும்' என்று எண்ண அலை களில் தவித்தார். இப்படித் தமது மனத் துள் எழுந்த வாதப் பிரதிவாதங்களைச் சகிக்க முடியாமல் மூடிய கண்களைச் சர்மா திறந்தார். அப்போது அவர் முன் நின்று கொண்டிருந்த பெண் வனஜா, "அப்பா!" என்று ஏதோ சொல்லத் தயங்கினாள்.

வியப்புடன் எழுந்து உட்கார்ந்த சர்மா, "என்னம்மா வேண்டும்!" என்றார். அவர் முன் நின்றிருந்த வனஜாவின் உடல் பயத்தால் சிறிது நடுங்குவதையும் கண்டார்.

நெற்றியில் துளித்து நின்ற வியர்வையைத் துடைத்துக் கொண்ட வனஜா மிகத் தயக்க மாக, "அப்பா......எனக்கு வைரத்தோடு வேண்டாம்......அந்தப் பணத்தை அவருக்குக் கொடுத்து......" என்று பயத்தால் மேலே சொல்ல முடியாமல் நிறுத்தினாள்.

நீண்ட பெருமூச்சு விட்ட சர்மா, "சரி யம்மா! உன் விருப்பப்படி ஆகட்டும்" என்றார். அவரது குரலில் விரக்தி நிறைந்து காணப்பட்டது. அதற்குமேல் அவரது பெண் வனஜா அங்கு நிற்கவில்லை.

சர்மா எழுந்தார். பீரோவைத் திறந்து வைரத்தோட்டைப் பெட்டியுடன் எடுத்துப் பையில் வைத்துக் கொண்டு, செருப்பை மாட்

டிக் கொண்டு கிளம்பி விட்டார். செருப்பின் ஒலியிலிருந்தே அவர் கோபத்தை அளந்து கொண்ட சர்மாவின் மனைவி சமையலறையை விட்டே வெளி வரவில்லை.

"வாருங்கள்" என்று புன்னகையுடன் சர்மாவை வரவேற்றான் வீட்டிலிருந்த ஜகதீசன். உள்ளே சென்று உட்கார்ந்த சர்மா, ஒரு டம்ளர் ஜலத்தைக் கேட்டு வாங்கிச் சாப்பிட்டுத் தம் மன உஷ்ணத்தைத் தணித்துக் கொண்டார். பிறகு மெல்ல பம்பாயில் சாப்பாடு, மற்றும் வசதிகள், கம்பெனி வேலை நேரம் இவைகளைப் பற்றியும் ஜகதீசனைப் பற்றியும் குசலம் விசாரித்தபடி பேச்சை ஆரம்பித்தார்.

அவரது கேள்விகளுக்குப் புன்முறுவலுடன் பதிலளித்த ஜகதீசன், இடையில் எழுந்து சென்று ஒரு சதுரமான அட்டைப் பெட்டியைக் கொண்டு வந்து அதைத் திறந்து சர்மாவின் கையில் கொடுத்து விட்டுச் சொன்னான். "எனக்கு வரும் சம்பளத்தில் இங்கு அம்மாவுக்கு அனுப்பியது போக மிகுதியில் சற்றுச் சிக்கனமாகவே என் தேவைகள் பூராவையும் செய்து சமாளித்துக் கொண்டுவிட முடிகிறது. அதனால் இரண்டு வருஷங்கள் கம்பெனியில் கொடுத்த 'போனஸ்' பணத்தில் இந்த நெக்லேஸைச் செய்ய முடிந்தது. இதில் பதித்துள்ள பன்னிரண்டு வைரக் கற்களும் மிக உயர்ந்த வைரங்கள்" என்றான்.

ஜாஜ்வல்யமாகப் பிரகாசித்த வைரக் கற்களுடன் கூடிய அந்த அழகான நெக்லேஸைக் கண்டு திகைத்த சர்மா தமக்குள் நினைத்தார்: 'இப்படிச் சிக்கனம் செய்து தன் குடும்பத்தாருக்கு ஒரு நகை செய்ததில் இவனுக்கு எவ்வளவு சந்தோஷம்! அந்தப் பணத்தை வீண் செலவுகளுக்காக ரொக்கமாக அவன் குடும்பத்தில் ஒருவர் கேட்டால் அவன் மனம் எப்படிக் கஷ்டப்படும்! அப்படித்தானே என் மனமும் என் பெண்ணுக்கு வைரத் தோடு போடும் பணத்தைக் கொடுக்கக் கஷ்டப்படும்! இதை ஏன் அவன் உணர வில்லை!' இப்படி எண்ணிய சர்மா தம் கையிலிருந்த நெக்லேஸை மேஜை மீது வைத்து விட்டுத் தம் பையிலிருந்த வைரத்தோட்டுப் பெட்டியை எடுத்துத் திறந்து மேஜை மேல் நெக்லேஸின் பக்கத்தில் வைத்து விட்டுச் சொன்னார்: "இந்தத் தோட்டின் வைரங்களும் மிக உயர்ந்தவை தான். இதன் பதினாறு கற்களும் ஒரே ஜதையாக அமைய வேண்டும் என்பதற்காக மிகக் கஷ்டப்பட்டுப் பொறுக்கிச் சேர்க்கச் செய்தேன். அதனால்தான் தோட்டை விற்க வேண்டும் என்றவுடன் மனம் கஷ்டப்படுகிறது."

ஜகதீசன், விஷயத்தை அடியோடு மறந்து விட்டவன் போல, "ஏன் அதை விற்கப் போகிறீர்கள்!" என்று கேட்டான்.

வியப்புடன் ஜகதீசன் முகத்தைக் கூர்ந்து நோக்கிய சர்மா, "விஷயத்தை நீ மறந்திருக்க மாட்டாய் என்று நினைக்கிறேன். உன் நிபந்தனைப்படி இந்த வைரத் தோட்டை விற்று ரூபாய் இரண்டாயிரத்தைக் கொடுத்துக் கலியாணத்தை நடத்திவிடத் தீர்மானித்து விட்டேன். இதைச் சொல்லவே இன்று இங்கு வந்தேன். நீ புறப்படுமுன் சொன்னால்தானே லீவுக்கும் ஏற்பாடு செய்து கொள்ள முடியும்" என்று கூறி நிறுத்தினார்.

"விஷயத்தை நான் மறக்கவில்லை. இது வனஜாவின் சம்மதமின்றி நீங்களாகச் செய்த முடிவுதானே!" என்றான் ஜகதீசன்.

திடுக்கிட்ட சர்மா, "இல்லை; சொல்லப் போனால் இது என் முடிவேயில்லை. இன்று என் பெண் வனஜாதான் சொல்லி விட்டாள், 'அப்பா எனக்கு வைரத்தோடு வேண்டாம்; அந்தப் பணத்தை அவருக்குக் கொடுத்து விடுங்கள்' என்று. இதை நான் எதிர் பார்க்கவேயில்லை. அவளுக்கு நான் பாடுபட்டுக் கட்டிய இந்த வைரத் தோட்டை விட உன் அன்புதான் உயர்வாகப் படுகிறது. அதை அறிந்த பின் நான் குறுக்கிட்டு நிறுத்த விரும்பவில்லை. இன்று இதை விற்க ஏற்பாடு செய்ய வேண்டும். ஆகையால் நானே வந்து மற்ற விஷயங்களுக்கு ஏற்பாடு செய்துகொள்கிறேன். இதை அம்மாவிடம் சொல்லு" என்று சொல்லி எழுந்தார்.

"சற்று இருங்கள்! இதோ அம்மாவும் கோவிலிலிருந்து வருகிற சமயம்தான்" என்ற ஜகதீசன் முகத்திலே பளிச்சென்று ஏற்பட்ட மலர்ச்சியைக் கண்டு சர்மா திகைத்தார். திகைத்த சர்மா, 'ஆகா! மாமனார் பணத்தைப் பாழ் பண்ணுவதில்தான் இந்த மாப்பிள்ளைகளுக்கு எத்தனை சந்தோஷம்!' என்று நினைத்தார். அதே சமயம் ஜகதீசன், "நீங்கள் தோட்டை விற்க வேண்டாம்! வனஜாவின் அன்பை, உறுதி செய்து கொள்ளவே இந்த நிபந்தனையைக் கொடுத்தேன்! என் சோதனையில் வனஜா வெற்றி பெற்று விட்டாள்! வைரத்தை வென்ற வனஜாவின் அன்பு என்னைத் திணறச் செய்கிறது. வைரத் தோட்டுடன் என் அன்புப் பரிசாக இந்த வைர நெக்லேஸையும் வனஜாவிடம் கொடுத்து விடுங்கள்!" என்றான்.

அதே சமயம் கையில் பிரசாதத் தட்டுடன் ஜகதீசனின் தாயும் உள்ளே நுழைந்தாள்.

கண்களில் அன்பு மிதக்கக் குதூகலத்துடன் நிற்கும் மைந்தனைத் திகைப்புடன் பார்த்தாள் தாய் மங்களம். சர்மாவோ மந்தகாசத்துடன் நிற்கும் ஜகதீசனை வாரியணைத்துக் கொள்ள வேண்டும் என்ற தாபத்தில் மூழ்கித் தவித்தார். மெள்ளச் சமாளித்துக் கொண்ட சர்மா ஜகதீசனின் தாயாரிடத்தில் சொன்னார்: "என் பெண் வனஜா இன்று உங்கள் பிள்ளை ஜகதீசனின் மனத்துக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தாள். ஜகதீசனோ எனக்கு இன்று எல்லையற்ற மகிழ்ச்சியுடன் மன நிம்மதியையும் கொடுத்து விட்டான்!" என்று சொல்லி அவன் தாய்க்கு விஷயத்தையும் விளக்கினார். பின் ஜகதீசன் பக்கம் திரும்பி, "நான் இரவு இங்கு தங்கி முகூர்த்த தினத்தைக் குறித்துக் கொண்டு போகிறேன். இந்தத் தோட்டையும், உன் அன்புப் பரிசையும் கலியாணத்தன்று நீயே உன் வனஜாவுக்கு அணிவித்துக் கொள்" என்று கூறிவிட்டு எழுந்தார்.

அடுத்த சுப முகூர்த்தத்தில் வனஜாவைத் தன் அன்பு மனைவியாகப் பெற்ற ஜகதீசன் அன்றே அவள் கழுத்தில் தன் அன்புப் பரிசையும் அணிவித்து மகிழ்ந்ததுடன், சர்மாவையும் மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தினான்.




வீரபாண்டிய ராஜாவின் கொலு மண்டபத்தில் தினமும் காலையில் சங்கீத வித்துவான்கள் வந்து பாடி விட்டுச் செல்வார்கள். ராஜாவும் தாயை இழந்த அவருடைய மகள் சந்திரமதியும் கேட்டு மகிழ்ச்சி அடைவார்கள். சந்திரமதி கல்வியும் பண் பாடும் அடைந்து அரசனுக்கு மிகவும் பிரியமாக வளர்ந்து வந்தாள்

மண்டபத்தில் சுவரோரத்திலும் தூண்களிலும் நடராஜன், முருகன், கணேசன், கண்ணன், சீதாராமன் முதலிய கல் சிற்பங்கள் இருந்தன.

அந்த விக்கிரகங்களும் இசையை நன்றாக அனுபவித்து வந்தன. பாட்டுக்களைக் கேட்கும்போது சிலைகளின் முகங்கள் பிரகாசிக்கும். அவற்றின் கண்களிலிருந்து கண்ணீர்த் துளிகள் உதிர்ந்து ஒழுகும்.

ஒருநாள் காஷ்மீர் தேசத்திலிருந்து ஒரு பெரிய இசை வித்துவான் வந்தார். அவர் பல நாடுகள் சென்று பலவிதமான கான முறைகளை யெல்லாம் பயின்று பிரசித்தி பெற்ற சங்கீத மகா வித்துவான். அவர் பெயர் கந்தர்வ வீரமகேசுவரர்.

கந்தர்வ மகேசுவரர் கொலு மண்டபத்தில் அவருக்காக அமைககப்பட்ட ஆசனத்தில் அமர்ந்தார். பாடினார். அவருடன் கூடவந்த பக்க வாத்தியக் காரர்களும் வாசித்தார்கள். சாமர்த்தியமாக 'சங்கதி'கள் போட்டுப் பாடினார்.

ராஜாவின் சங்கீதப் புலவர்கள் எல்லாரும் பாராட்டினார்கள். ராஜாவும் அனுபவித்தான். கந்தர்வ வீரருக்கு அரசன் பெரிய பரிசு கொடுத்தான். பெற்றுக் கொண்டு அவரும் திரும்பிச் சோழ ராஜாவின் நகரத்துக்குச் சென்றார்.

கந்தர்வ மகேசுவரர் பாடியபோது மண்டபத்திலிருந்த சிலைகளின் கண்களிலிருந்து கண்ணீர் வடியவில்லை. முகங்களில் வழக்கம்போல் புது ஒளியும் தோன்றவில்லை.

ராஜகுமாரி தகப்பனைக் கேட்டாள்: "அப்பா! ஏன் அந்தப் பெரிய வித்துவான் பாடியபோது நம்முடைய

# நெட்டிப்

மண்டபத்தை அலங்கரிக்கும் விக்கிரகங்கள் வழக்கம் போல் பிரகாசிக்க வில்லை?''

ராஜா சிரித்தான்.

''நம்முடைய சிலைகளுக்கு உயர்ந்த சங்கீதப் பயிற்சி இல்லைபோல் இருக்கிறது'' என்றான்.

''வித்துவான் தெய்வ பக்தியோடு பாட வில்லை போல் இருக்கிறது'' என்றாள் சந்திரமதி.

''நீ சொல்லுவது உண்மை, சந்திரமதி. எனக்குக்கூட இந்த கந்தர்வ வீரர் பாடிய போது உள்ளம் கரையவில்லை. பரிசு கொடுத்தேன். சங்கீதம் சுத்தமாகவும் சாமர்த்தியமாகவும் இருந்தது. ஆனால் இதயத்தைத் துளைக்க வில்லை. அழகிய கோயில், விமானம், கோபுரம், எல்லாம் நிர்மாணித்துக் கட்டினார். ஆனால் உள்ளே மூர்த்தி இல்லை. நம்முடைய பாடகர் கொஞ்சம் பாடினாலும் நமக்கு உண்டாகும் உணர்ச்சி இந்த மகா வித்துவானுடைய கானத்தில் நமக்கு ஏற்பட வில்லை'' என்றான் அரசன்.

"அதோ நம்முடைய தீக்ஷிதர் வந்து விட்டார். பாடுவார், கேட்கலாம்!'' என்று ராஜகுமாரி குதூகலத்துடன் சொன்னாள். அரமனைப் பாடகர் வைத்தியநாத தீக்ஷிதர் பாடினார்.

உடனே விக்கிரகங்களின் திவ்விய முகங்களும் சந்திரமதியின் முகமும் மலர்ந்து புதுப்பொலிவு அடைந்தன. மண்டபத்தில் ஜோதி நிறைந்தது! கற் சிலைகளின் கண்களில் கண்ணீர் தேங்கிற்று.

''செட்டி வேலைப் பூவில் வாசனை இருக்காது. தீக்ஷிதர் பாடும் பாட்டு தலையில் சூட்டும் தாழம்பூவைப் போன்றது. காஷ்மீர் வித்துவானுடைய சங்கீதம் செட்டிப் பூமாலை'' என்றாள் சந்திரமதி.

''உண்மை!'' என்றான் அரசன்.

''தெய்வ பக்தியில் கானம் என்கிற அற்புதப் பொருள் உலகத்தில் தோன்றிற்று. குளத்தில் செந்தாமரை தோன்றுவது போல். குளத்திலிருந்து பறித்து எடுத்து விட்ட கமலம் கொஞ்ச நேரம் சுவாசனையுடன் பரிமளிக்கும். பிறகு வாடிப் போகும். காகிதத்தாலும் செட்டியாலும் செய்யப்பட்ட தாமரைப் பூவைப்பற்றிச் சொல்லவே வேண்டியதில்லை. போவோம் வா'' என்று சொல்லி ராஜா மகளுடன் அரமனைக்குள் சென்றான்.



# பூமாலை

ராஜாஜி




## வேம்பின் சேதனக் குணங்கள் கொண்டது இந்த ஒரே பற்பசை தான் - பற்களுக்கும் ஈறு களுக்கும் மிகச் சிறந்தது!

கல்கத்தா கெமிக்கல்

ஜே - 41 லை 55

தென் இந்தியா ஆபீஸ் :
5/149, பிராட்வே, சென்னை

---

எல்லா ஊர்களிலும்

**புது ஏஜண்டுகள் தேவை**

உடனே விண்ணப்பிக்கவும்

★

# மாலா

தமிழ் இலக்கிய, கலை மாதப் பத்திரிகை

**விலை அணா 6**

போஷகர் : குமாரி வைஜயந்தி மாலா

வேண்டிய பிரதிகளுக்கு 25% கமிஷன் நீக்கி முன் பணம் அனுப்பக்கூடிய ஏஜண்டுகள் மட்டும் விண்ணப் பிக்கவும். மாதிரி பிரதிக்கு எழுதவும்.

விவரம்

**மாலா**
சதர்ன் அவின்யூ - ஆள்வார்பேட்டை
மதராஸ்-18

---

நண்பர் ஒரு நல்ல செய்தியைச்சொன்னார். அடிக்கடி எப்ரிலைம் உட்கொள்வதால், அவர் ஆஸ்த்மா உபாதையால் தற்பொழுது பீடிப்பதில்லை.



# EPHRILIME

## எப்ரிலைம்



நீண்ட நாள்பட்டதும், மிக்க உபாதை தரக்கூடியதுமான மார்ச்சளி, ஆஸ்த்மா முதலிய நோய்களுக்கு ஓர் சிறந்த ஹானியற்ற மருந்து.

**யூனியன் டிரக் கம்பெனி, லிட்.**
மதராஸ் டிப்போ :
2, ஜோன்ஸ்லேன் : மதராஸ்-1




## 29. நல்ல பையன்

அன்று காலை வேளை. மணி பத்து இருக்கும். காஞ்சிபுரத்துத் தெருவிலே ஒரு பையன் தலைதெறிக்க ஓடிக் கொண்டிருந்தான். அவன் கையிலே ஒரு பொட்டணம் இருந்தது. ஓடும் வேகத்தில் கையில் இருந்த பொட்டணம் அவிழ்ந்து உள்ளேயிருந்த நாலு பட்டுப் புடவைகள் ஒன்றன் பின் ஒன்றாகத் தெருவிலே விழுந்தன. கீழே புடவைகள் விழுவதைக் கண்டதும், அவன் ஓட்டத்தை நிறுத்தினான். கீழே குனிந்து அந்தப் புடவைகளை எடுத்தான். அப்போது, "டேய் திருட்டுப் பயலே!" என்ற குரல் கேட்டு நிமிர்ந்து பார்த்தான். அவனை நோக்கி வந்து கொண்டிருந்தார் ஒரு போலீஸ்காரர்.

போலீஸ்காரர் அவன் அருகே வந்து, அவன் கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டார். "டேய், இதையெல்லாம் எங்கே திருடினாய்?" என்று அவனை மிரட்டினார்.

"என்ன! திருட்டா! ஐயோ, என்னையா திருடன் என்கிறீர்கள்! அந்தப் பழக்கமே என்னிடத்திலே இல்லையே!"

"டேய், என்னடா நடிக்கிறாய்? வா போலீஸ் ஸ்டேஷனுக்கு. அங்கு வந்து சப்-இன்ஸ்பெக்டரிடத்திலே உன் புளுகு மூட்டையை அவிழ்த்துவிடு" – இப்படிக் கூறிக் கொண்டே புடவைகளைப் பறித்து ஒரு கையில் வைத்துக்கொண்டு, மற்றொரு கையால் அந்தப் பையனைப் பிடித்து இழுத்தார் போலீஸ்காரர்.

"ஐயோ! நான் திருடனில்லையே! சத்தியமாக நான் திருடனில்லை. நடந்ததைக் கேளுங்கள்; தயவு செய்து கேளுங்கள்" என்று கதறினான் அந்தப் பையன். போலீஸ்காரர் அவன் பேச்சைக் கேட்கத் தயாராக இல்லை. அவனைப் பிடித்துப் பலவந்தமாக இழுத்தார். இதற்குள் அவர்கள் இருவரையும் சுற்றிப் பெரிய கும்பல் கூடிவிட்டது.

அந்தச் சமயம் எதிரிலிருந்து ஒரு மோட்டார் கார் வந்தது. கூட்டம் வழியை மறைத்துக் கொண்டிருந்ததால் அந்தக் கார் அங்கேயே நின்றுவிட்டது. கார் நின்றதும், உள்ளேயிருந்து ஒரு மனிதர் இறங்கி வந்தார். வேடிக்கை பார்ப்பதற்காக அவர் கும்பலுக்குள் புகுந்து சென்றார். கும்பல் நடுவிலே போலீஸ்காரர் பட்டுப் புடவைகளுடன் நிற்பதைக் கண்டதும் அவர் திடுக்கிட்டார். உடனே அவர், முண்டியடித்துக் கொண்டு போலீஸ்காரரின் அருகிலே சென்றார். "ஏனய்யா, இந்தப் புடவைகளெல்லாம் எப்படி இங்கே வந்தன?" என்று கேட்டார்.

"எப்படி வந்ததா! இதோ இந்தத் திருட்டுப் பயல் அமுக்கப் பார்த்தான். நானா விடுவேன்? உடும்புப் பிடியாய்ப் பிடித்து விட்டேன்" என்று பெருமையோடு கூறினார் போலீஸ்காரர்.

உடனே அந்தப் பையன் அந்த மனிதரைப் பார்த்து, "ஐயா, ஐயா, நல்ல சமயத்திலே நீங்கள் வந்தீர்கள். உங்களுக்குத்தான் உண்மை புரியும். அந்த மண்டபத்திலே நீங்கள் இந்தப் பொட்டணத்தை மறந்து வைத்து விட்டு மோட்டாரிலே ஏறிவிட்டீர்கள். அப்போது தற்செயலாக நான் இதைப் பார்த்தேன். உடனே 'சார், சார்' என்று கூவிக் கொண்டே உங்களிடம் பொட்டணத்தைப் பற்றிச் சொல்ல வந்தேன். ஆனால், நீங்கள் என் பேச்சைக் கேட்க விரும்பாமல் போய் விட்டீர்கள். ஆனாலும் நான் விடாமல் பொட்டணத்தை எடுத்துக் கொண்டு காரைப் பின் தொடர்ந்து ஓடி வந்தேன். எப்படியாவது உங்களிடம் சேர்த்து விட வேண்டுமென்றுதான் வேகமாக வந்



தேன். வழியிலே முடிச்சு அவிழ்ந்து புடவையெல்லாம் விழுந்துவிட்டன. நல்லது செய்யப் போக இப்படிப் பொல்லாப்பு வந்து விட்டதே!'' என்று கண் கலங்கக் கூறினான்.

இதைக் கேட்டதும், அந்த மனிதர் சிறிது நேரத்துக்கு முன்பு நடந்ததை நினைத்துப் பார்த்தார். அவர், அவருடைய மனைவி, ஐந்து வயதுப் பெண் மூவரும் காஞ்சி வரதராஜப் பெருமாள் கோயிலுக்குப் போய் சுவாமி தரிசனம் செய்து விட்டு, கோயிலுக்கு எதிரேயுள்ள மண்டபத்தில் நின்று கொண்டிருந்தார்கள். அவர்கள் ஒரு மோட்டார் காரை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். சிறிது நேரத்தில் அவர்கள் எதிர்பார்த்த கார் வந்து விட்டது. உடனே அவர்கள் மூவரும் காரில் ஏறிக் கொண்டார்கள். கார் புறப்படப் போகும் போதுதான் அந்தப் பையன் 'சார் சார்' என்று கூவிக் கொண்டே அருகிலே ஓடி வந்தான். அவன் பிச்சைதான் கேட்கிறான் என்று நினைத்து 'போடா, வேலையற்றவனே!' என்று ஏசிவிட்டு, டிரைவரைப் பார்த்து, 'ம்..... நீ போ' என்று உத்தரவிட்டார். கார் வேகமாகப் பறந்து சென்றது. ஆனாலும், 'சார் சார்' என்ற குரல் மட்டும் சிறிது நேரம் பின்னால் கேட்டுக் கொண்டேயிருந்தது. காருக்குள் இருந்த எவருமே திரும்பிப் பார்க்கவில்லை. அந்தப் பையன் பொட்டணத்தைக் கொடுக்கத்தான் 'சார், சார்' என்று கூவினான் என்பது இப்போதுதான் அவருக்குப் புரிந்தது.

உடனே அவர், ''அடடா! ஆமாம் தம்பி. உன்மேல் தவறே இல்லை'' என்று கூறிவிட்டுப் போலீஸ்காரரைப் பார்த்து, ''ஐயா போலீஸ்காரரே, பையன் சொல்வதெல்லாம் உண்மைதான். என் சம்சாரம் மண்டபத்திலே ஒரு தூணுக்குப் பக்கத்திலே இந்தப் பொட்டணத்தை வைத்திருந்தாள். கார் வந்ததும், அவசரத்தில் அதை அவள் மறந்து போய் விட்டாள். எனக்கும் ஞாபகம் இல்லை. சற்று முன்புதான் ஞாபகம் வந்தது. உடனே காரைத் திருப்பிக்கொண்டு வந்தோம். இந்தப் பையன் மேல் குற்றமே இல்லை. குற்றமெல்லாம் எங்கள் மேல்தான்'' என்றார்.

பெரிய 'கேஸ்' ஒன்றைக் கண்டு பிடித்து விட்டதாகப் பெருமைப் பட்டுக் கொண்டிருந்த போலீஸ்காரர் முகத்திலே அசடு வழிந்தது. பேசாமல் புடவைகளை அந்த மனிதரிடம் கொடுத்துவிட்டு, அங்கிருந்து நழுவி விட்டார். உடனே கூட்டமும் கலைய ஆரம்பித்தது.

அந்த மனிதர், பையனைப் பார்த்து, ''தம்பி, நீ இதற்காக எவ்வளவு தூரம் ஓடி வந்திருக்கிறாய்! பாவம், உன்னைப் போய்த் திருடனென்று சொன்னாரே அந்தப் போலீஸ்காரர்! நல்ல காலம், உன் கையில் கிடைக்காதிருந்தால் இதன் கதி என்ன ஆகியிருக்குமோ! நாலு புடவையும் கிட்டத்தட்ட ஆயிரம் ரூபாயாகிறது! நான் உன்னைப் பிச்சைக்காரன் என்று நினைத்து விரட்டினேன். அப்படியிருந்தும் நீ எங்களுக்கு நல்லது செய்ய முன் வந்தாய். உண்மையிலேயே நீ நல்ல பையனப்பா. சரி, வா. காரிலே நீயும் ஏறிக் கொள். எங்கள் உறவினர் வீடு நாளாவது தெருவிலே இருக்கிறது. அங்கே போய்ப் பேசிக் கொள்ளலாம்'' என்று கூறி அவனை அழைத்துக் கொண்டு காருக்கு வந்தார். காரில் உட்கார்ந்து கொண்டிருந்த தன் மனைவியிடம் நடந்ததையெல்லாம் சுருக்கமாக எடுத்துச் சொன்னார்.

அதைக் கேட்டதும், ''பாவம், நல்ல பையன்'' என்றாள் அவரது மனைவி.

''அடே இந்த அண்ணா நல்ல அண்ணாதான்!'' என்று கூறினாள் அவரது அருமைப் பெண்.

அந்த மனிதர் யாரென்பது தெரிய வேண்டாமா? (தொடரும்)




# டவர் பிராண்ட்

# கலாய் வாளிகள்



எல்லா சைஸ்களிலும்
கிடைக்கும்

○●○

*தயாரிப்பாளர்கள் :*

**மதுரை சௌத் இந்தியா
கார்ப்பொரேஷன் லிட்.,**

தபால் பெட்டி எண் 1823

20, கோவிந்தப்ப நாயக்கன் தெரு

மதராஸ் - 1






# தமிழ் கூறும் நல்லுலகம்

கோரேகான் தமிழ்ச் சங்கத்தின் இரண்டாவது ஆண்டு விழா டிசம்பர் 24, 25 தேதிகளில் வெகு விமரிசையாகக் கொண்டாடப் பட்டது. மேற்கு பிராந்திய ரயில்வே ஜெனரல் மானேஜர் ஸ்ரீ கணபதி இவ்விழாவை ஆரம்பித்து வைத்தார்.

சென்னை பச்சையப்பன் கல்லூரி உதவித் தமிழ் ஆசிரியர் அ. ச. ஞானசம்பந்தம் அவர்கள் இவ்விழாவுக்குத் தலைமை வகித்து, "தமிழன் வாழ்வு அன்று", "கவிச்சக்கரவர்த்தி", "பாரதியின் படைப்பு" என்ற தலைப்புகளில் இரு தினங்கள் அருமையான சொற்பொழிவாற்றினார்கள். அன்றையத் தமிழனின் உன்னத நிலைக்கும், இன்றையத் தமிழனின் தாழ்ந்த நிலைக்கும் உள்ள காரணங்களை எடுத்துக் காட்டிப் பேசினார்கள்.

24ம் தேதி இரவு பத்மநாபன் குழுவினர் வீரபாண்டிய கட்டபொம்மனின் சரித்திரத்தை வில்லுப்பாட்டில் இசைத்தனர். மறு நாள் திரு ஜி. என். பாலசுப்ரமணியம் அவர்கள் இன்னிசை விருந்தளித்தார். காரியதரிசி ஸ்ரீ ஈ. நடராஜன் வந்தனோபசாரம் கூற விழா இனிது முடிந்தது.

விழாவை ஒட்டிச் சங்கத்தினர் ஒரு அழகிய ஆண்டு விழா மலரை வெளியிட்டுள்ளனர்.

★

நாகபுரி தென்னிந்திய கலைக் கழகம் 7-1-56 அன்று "கல்யாணி" என்ற சமூக நாடகத்தைத் திறம்பட நடித்தனர். படித்துப் பட்டம் பல பெற்றிருந்திடினும் கெட்ட பழக்கங்களில் ஈடுபட்டால் இந் நிலைக்கு வரத்தான் செய்கிறார்கள் என்பதற்கு எடுத்துக் காட்டுத்தான் "கல்யாணி" நாடகம்.

திரு எல். எஸ். கோபாலன், திரு கே. சீனிவாசன் இவர்களது டைரக்ஷனில் உருவாக்கப் பட்டது கல்யாணி. அந்நாடகத்தில் பங்கு கொண்ட பலரும் தம் தம் பாகத்தை எவரும் பாராட்டத் தகுந்த முறையில் நடித்து மக்களின் பாராட்டுதலைப் பெற்றனர்.



பம்பாய் ஸ்ரீ பி. ஜி. சீதாராம் அவர்களின் புதல்விகள் ஸ்ரீமதி சரஸ்வதியும் ஸ்ரீமதி லக்ஷ்மியும் பம்பாய் அகில இந்திய ரேடியோவில் ஜனவரி 15ம் தேதி இனிமையாகப் பாடினார்கள்.

★

சென்னை விவசாய மந்திரி ஸ்ரீமான் பக்தவத்ஸலத்துக்குப் பம்பாய் தமிழ்ச் சங்கத்தினர் ஒரு வரவேற்பு அளித்தனர்.

வரவேற்புக்குப் பதிலளிக்கையில் ஸ்ரீ பக்தவத்ஸலம் தமிழ்ச் சங்கம் தமிழுக்குச் செய்து வரும் தொண்டைப் பற்றிக் கூறி விட்டு, தமிழ் நாட்டில் புயலினால் ஏற்பட்டுள்ள கஷ்டங்களைக் கூறினார்.

தமிழ்ச் சங்கத்தின் தலைவரான ஸ்ரீ வி. ஆர். சுப்பிரமணியம், ஸ்ரீ டி. வி. ராமானுஜம், ஸ்ரீ கே. சீனிவாசன், பிரின்ஸிபல் ஸ்ரீ சீனிவாசய்யர், டாக்டர் எஸ். கிருஷ்ணன் முதலியவர்கள் ஸ்ரீ பக்தவத்ஸலத்தின் அரிய சேவைகளைப் பற்றிப் பேசினார்கள்.

தமிழ்ச் சங்கத்தினரால் ரூ 250 புயல் நிதிக்காக மந்திரியிடம் கொடுக்கப்பட்டது.

★

தமிழர்கள் எங்கு சென்றாலும் தங்களுக்கென்று சங்கங்கள், சபாக்கள், பள்ளிக்கூடங்கள் முதலியவைகள் அமைத்துக் கொண்டு முன்னணிக்கு வந்து விடுவார்கள்.

பம்பாயை அடுத்துள்ள வில்லிப் பார்லாவில் வசிக்கும் தமிழர்கள் "கிரேட்டர் பம்பாய் எஜுகேஷன் சொஸைட்டி" என்ற ஒரு பள்ளியை நடத்தி வருகிறார்கள்.

அதற்குச் சொந்தமாக ஒரு கட்டடம் இல்லாதது மிகவும் அசௌகரியமாக இருந்தது. எனவே பள்ளி கட்டட நிதிக்காகப் பள்ளிக்கூடக் கமிட்டியினர் குமாரி சுசீலாவின் பரத நாட்டியத்தை ஏற்பாடு செய்துள்ளனர். அந் நடனம் பம்பாய் மாதுங்கா கிங் ஜியார்ஜ் ஹைஸ்கூலில் பிப்ரவரி 12ம் தேதி நடைபெற இருக்கிறது.

★

பம்பாய்க்கு அருகே பெரும்பான்மையாகத் தமிழர்கள் வசிக்கும் கல்யாணில், தமிழ்த் தொண்டும், கலைத் தொண்டும் ஆற்றி வரும் "பாரதி தமிழ்ச் சங்கம்" கடந்த 14-1-56 அன்று பொங்கல் விழாவை மிகச் சிறந்த முறையில் ராம்வாடியில் கொண்டாடியது. அவ்விழாவில் ஸ்ரீமதி சீதாலக்ஷ்மி கிருஷ்ண மூர்த்தி ராவ் அவர்களின் வீணைக் கச்சேரியும் ஸ்ரீமான் ரங்கநாதன் அவர்களின் வாய்ப்பாட்டும் அங்கு குழுமி யிருந்த சபையோர்களின் பாராட்டுதலைப் பெற்றன. விழாவுக்குத் திரு வ. மகாதேவன் (தலைவர், பாரத் முன்னணி வட்டம்) தலைமை வகித்துப் பொங்கலைப் பற்றிப் பேசினார். ஆண்களோடு பெரும்பான்மையாகப் பெண்களும் பங்கு கொண்டதோடல்லாமல், வட இந்தியர்களும் இந்த விழாவில் போற்றத்தக்க முறையில் கலந்து கொண்டனர். திரு சி. வி. ஐயராமன் நன்றிகூற விழா இனிது முடிந்தது.—கண்ணன்



# ரவிசந்திரிகா

## 42. அவசரத் தந்தி!

"பூமியின் எல்லையெங்கும் உள்ளவர்களே! என்னை நோக்கிப் பாருங்கள்; அப்பொழுது இரட்சிக்கப் படுவீர்கள்!" என்றார் கர்த்தர். மக்களின் பாபங்களுக்காக அவர் புண்பட்டார். மனித ஜாதியின் அக்கிரமங்களுக்காக அவர் துயருற்றார். அந்தத் திருக்குமாரனுடைய துன்பத்தில் நாம் குணமடைகிறோம்! நமக்குச் சமாதானத்தை உண்டு பண்ணும் ஆக்கினை அவர்மேல் வந்தது; அவருடைய தழும்புகளால் நாம் குணமாகிறோம்!"

இவ்வாறு 'விவிலியவேத' வாக்கியங்களைப் பேசிக்கொண்டு சென்றார் பாதிரியார்.

அன்று ஞாயிற்றுக்கிழமை. கிறிஸ்துவ ஆலயத்தின் மோனச் சூழ்நிலையில், நூற்றுக் கணக்கான பக்தர்களின் திருக்கூட்டத்தில் விவி ஓட் அவுஸும் மண்டியிட்டு நின்றான்.

"ஒரு பாவமும் செய்யாமல், நன்மையே செய்யத்தக்க நீதிமான் பூமியில் இல்லை. நாம் எல்லாரும் ஆடுகளைப் போல வழி தப்பித் திரிந்து அவனவன் தன் தன் வழியிலே போனோம். நமக்குப் பாவமில்லையென்போமானால், நம்மை நாமே வஞ்சிக்கிறவர்களாயிருப்போம்; சத்தியம் நமக்குள் இராது. தன் பாவங்களை மறைக்கிறவன் வாழ்வடைய மாட்டான்; அவைகளை அறிக்கை செய்து விட்டு விடுகிறவனே இரக்கம் பெறுவான்!"

பாதிரியாருடைய பிரார்த்தனைச் சொற்பொழிவு முடிந்து பக்தர் கூட்டம் கலைந்து சென்றது. ஆனால், ஓட் அவுஸ் மட்டும் அங்கிருந்து நகரவில்லை.

நேற்றிரவு தந்தி ஆபீஸில் அப்புலிங்கத்தைச் சந்தித்த பிறகு விவிக்கு மனத்தில் ஏதேதோ சிந்தனைகள் ஆறுதலின்றி எழுந்து கொண்டிருந்தன. வீட்டுக்கு வந்து படுக்கையில் படுத்தவன் உறக்கமே இல்லாமல் புரண்டு கொண்டேயிருந்தான்.

தன்னுடைய வாழ்க்கை இதுவரை பற்றுக்கோடு இல்லாமல் கழிந்து விட்டது. உண்மையில் அவனுடைய சமூகத்தில் திருமணம் செய்து கொள்ளாமல் கன்னியராகவே வாழ்ந்து மறைந்தவர்கள் எத்தனையோ பேரை அவனுக்குத் தெரியும். ஏன்? அவனுடைய தாயாரின் சகோதரி ஒருத்தி—அவனுடைய சிற்றன்னை - சாகும் வரை கன்னியாகவே வாழ்ந்து மறைந்தான். அது அவனுக்குத் தெரியும். அந்த வாழ்க்கை அவனுக்குப் புதிதில்லை. ஆனால் இப்பொழுது அவன் நினைத்தது அவனுடைய தாயாரைப் பற்றித்தான்.




விவியின் தாயார் மரணமடைவதற்கு முன்பு விவியிடம் ஒரு விஷயத்தைச் சொல்லியிருந்தான். அதாவது அவனுக்குப்பிறகு மகன் விவியிடந்தான் குடும்பப் பொறுப்பு சாரப்போகிறது.

ஜான் உள்பட ஆண் பிள்ளைகள் எல்லாம் உத்தியோக நிமித்தம் வெளியூர்களுக்குப் போய் விடுவார்கள். தகப்பனரைக் கவனித்துக் கொள்கிற பொறுப்பும், சின்னத் தம்பியைப் படிக்க வைத்து முன்னுக்குக் கொண்டு வர வேண்டிய கடமையும் லிலிக்குத்தான் என்று அவளுடைய தாயார் அந்த நாளில் நூறு தடவை சொல்லியிருக்கிருள். உண்மையில் டெலிபோன் எக்சேஞ்சில் முன்னுக்கு வரவேண்டும் என்ற தீவிர நோக்கத்துடன் இரவு பகல் பாடுபட்டு லிலி உழைப்பதெல்லாம் தன்னுடைய குடும்ப முன்னேற்றத்துக்காகத்தான். ஆனல் அதில் ஒரே ஒரு சிரமம், நாலு பேரைப் போல் தானும் வீடும் குடித்தனமும் என்று இருக்கமுடியாது என்பதுதான்.

'டெலிபோனில் வேலை பார்ப்பது என்ருல் கல்யாணம் பண்ணிக் கொள்ளக் கூடாது' என்று ஒரு வரையறை! கல்யாணம் பண்ணிக் கொள்வதாயிருந்தால் உத்தியோகத்தை விட்டு விட வேண்டும். லிலிக்குத் திருமணம் செய்துகொண்டு நல்ல முறையில் குடித்தனம் பண்ண வேண்டும் என்று விருப்பம் இருந்தபோதிலும், உத்தியோகத்தை விட்டு விட இஷ்டமில்லை. எத்தனையோ வாலிபர்கள் அவளுடைய அழகிலே மோகப்பட்டுக் கல்யாணம் பண்ணிக் கொண்டு உத்தியோகத்தை விட்டு விடும்படி அவளிடம் வந்து சொன்னதுண்டு. அப்பொழுதெல்லாம் அவள் மன உறுதியோடு 'முடியாது' என்று சொல்லி விடுவாள். நாகரத்தினமும் குப்புசாமியும் முன்னொரு சமயம் விஷமத்தனமாக நடந்துகொண்டதுபோல இப்பொழுதும் சிலர் அவளுக்குக் காதல் கடிதங்கள் எழுதுவதுண்டு. அவற்றையெல்லாம் படித்தும் படிக்காமலும் கிழித்து எறிந்து விடுவாள் லிலி. குடும்ப பாரமும், கடமை என்ற உணர்ச்சியும் அவளுடைய இதயத்தில், வலுவடைய வலுவடைய, ஏசுநாதர் அவள் உள்ளத்திலே ஓர் அசாதாரணமான உறுதியைக் கொடுத்து வந்தார். அவளோடு பழகிய சம வயதுப் பெண்களுக்கும், அவளுடைய உறவினர்களுக்கும் அவளுடைய கண்ணுக்கு முன்னுலேயே திருமணம் நடக்கும். அப்பொழுதெல்லாம் லிலி ஒரு வயதான அம்மாளைப் போலக் கல்யாணக் காரியங்களைச் சற்றும் மனச் சிதறல் இன்றிக் கவனிப்பாள்.

இப்படியெல்லாம் இருந்துங்கூட நேற்றிரவு அவளுடைய மனம் அத்தனை கிலேசம் அடைந்ததற்குக் காரணம் சிலம்பக் கூத்தும், நாகரத்தினம் செய்த வம்புத்தனமும், சந்திரிகாவின் வாழ்க்கையில் ஏற்பட்ட குமைச்சல்களைப் பற்றி அவள் கேள்விப்பட்டதை நினைத்துப் பார்த்ததும்தான்.



'ஒரு பெண் திருமணம் செய்து கொள்ளாமல் வாழ நினைத்தால், சமூகம் அந்த நினைப்பைக் கெடுப்பதற்கு எத்தனை உத்சாகத்தோடு முனைந்து கேடு செய்கிறது!' — இவ்வாறு நினைத்தாள் லிலி. இந்த நினைப்போடு, இப்பொழுது பாப புண்ணியங்களைப் பற்றிப் பாதிரியார் செய்த சொற்பொழிவும் சேர்ந்து கொண்டு லிலியின் மனத்தை மேலும் கிளறியது.

'குடும்பப் பொறுப்பு என்னுடையது என்ருளே தாயார். அந்தப் பொறுப்பைச் சரியாக நான் நிறைவேற்ற வேண்டுமே! பாவப் பாதையிலே நான் காலெடுத்து வைத்து விடக் கூடாதே!'

இவ்வாறு ஒரு கவலை லிலியின் மனத்தில் உண்டாயிற்று. ஆலயத்திற்கு வெளியே வந்தாள். அந்த ஆலயத்தின் திறந்த வெளியில் தோட்டம் போன்று இருந்த பரந்த நிலத்தில் கல்லறைகள் நின்றன. லிலியின் தாயார்

அந்தக் கல்லறைகள் ஒன்றின் கீழேதான் மரண நித்திரை செய்கிறான்.

சஞ்சலமும் துக்கமும் அதிகரித்தவனாக லிலி ஓட் அவுஸ் அந்தக் கல்லறையை நோக்கி நடந்தான். நடந்து சென்று மண்டியிட்டான். உருக்கமான முறையில் தன் தாயை நினைத்துக் கண்ணீர் வடித்த வண்ணம் பிரார்த்தனை செய்தான்.

"யாருடைய வாழ்வில் என்ன மாறுதல் உண்டான போதிலும் என்னை அப்பழுக்கற்ற கன்னியாகவே வைத்திரம்மா! உன் விருப்பப்படியே நான் குடும்ப பாரத்தைச் சுமக்கிறேன்!" என்று நியானித்தான் லிலி. அப்போது எங்கோ கனவு உலகிலிருந்து கேட்பது போல ஒரு அமானுஷ்யமான குரல் லிலியின் நினைவுச் செவியிலே ஒலிக்கண்டவாறு ஒலித்தது:

"வருத்தப்பட்டுப் பாரம் சுமக்கிறவர்களே! நீங்கள் எல்லாரும் என்னிடத்தில் வாருங்கள்! நான் உங்களுக்கு இளைப்பாறுதல் தருவேன்!"

* * *

அகில உலகச் செய்தி ஸ்தாபனத்தில் ராமநாதன் ஏகச் சுறுசுறுப்பாகச் செய்திகளை வகைப்படுத்துவதும், டெலி ப்ரிண்டரில் வந்து சேர்ந்த தகவல்களைக் கத்தரித்து அந்தந்தக் கிளைகளுக்கு அனுப்புவதுமாக மூச்சுவிட நேரமில்லாமல் ஒரே படபடப்பாக வேலை செய்து கொண்டிருந்தான். அப்போது, சற்றும் எதிர்பாராத விதமாக வேகமாக ஒரு 'சப்ராஸி' வந்து ஒரு தந்தியைக் கொண்டு வந்து மேஜைமேல் ராமநாதனுக்கு முன்பாக வைத்தான்.

தந்தி உறையைப் பார்த்ததும் ராமநாதனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. அது ஆபீஸ் தந்தி யில்லை. 'ராமநாதன்' என்று பெயர் போட்டு விலாச மிட்டிருந்தது. எனவே சொந்தக் காரியமாக வந்த தந்தியாகத்தான் இருக்க வேண்டும்.

பதறிய கைகளோடு அந்தத் தந்தியை எடுத்து உடைத்துப் பார்த்தான் ராமநாதன். திருச்சியிலிருந்து அப்புலிங்கம் கொடுத்திருந்த தந்தி அது.

"மிகவும் முக்கியம். எந்த வேலை எப்படியிருந்தாலும் உடனே இரண்டு வாரம் லீவு போட்டுக் கொண்டு இங்கே வந்து சேர வேண்டும். டாக்டர் சுரேஷும் நானும் ஆவலோடு காத்திருக்கிறோம். அப்பு."

இந்தத் தந்தியைப் படித்ததும் ராமநாதனுக்குப் படபடப்பு இன்னும் அதிகரித்தது. விஷயங்களை ஏற்கனவே ஒருவகையாக ஊகித்திருந்த போதிலும், சாதாரணமாகக் கடிதத்திலே வந்து சேர வேண்டிய ஒரு முக்கிய செய்தியைத்தான் அவன் இந்த நிமிஷம் வரை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். அதற்கு மாறாக இப்பொழுது இந்தமாதிரி ஒரு தந்தி வந்தது அவனுக்கு ஒரே திகைப்பாகப் போய்விட்டது.

அக்காள் சாவித்திரி அம்மாளிடமிருந்து 'கடிதம் வரும், கடிதம் வரும்' என்று எதிர்பார்த்துக் கொண்டே யிருந்தான். ஆனால் அவளிடமிருந்து எவ்விதமான தகவலும் இல்லை. அது விஷயம் அவனுக்கு அளவற்ற ஆத்திரத்தைக் கொடுத்திருந்தது. இப்பொழுது இப்படி ஒரு தந்தியும் வரவே, ஆத்திரத்தை அதிகரித்ததோடு பொறுமை யில்லாத நிலைமையில் அக்காளிடம் கடுமையாகக் கோபமே உண்டாயிற்று ராமநாதனுக்கு.

'சடசட என்று வாயாடிப் பேச்சுப்பேசத்தான் லாயக்கு அவள். என்ன விஷயம், முடிவு என்ன, என்றெல்லாம் சட்டென்று தெரிந்து கொள்ள அவளால் முடியாது. வழவழப்பு!'—மனத்துக்குள்ளே அக்காளை இப்படிச் சபித்துக் கொண்டான்.

'பம்பாய் சென்று வந்ததில் ஒரு வாரம் போயிற்று. இப்பொழுது பழையபடியும் இரண்டு வாரம் என்றால், எப்படி லீவு கேட்பது?' என்று ஒரே எரிச்சலோடு நெற்றியைப் பிசைந்து கொண்டிருக்கும் போதே, ராமநாதனின் மேலதிகாரி அவனுடைய அறைக்குள்ளே நுழைந்தார்.

"என்ன ராமநாதன்! எப்பொழுது புறப்படுகிறீர்கள் திருச்சிக்கு?" என்று கேட்டார் அவர், புன்முறுவலோடு. ராமநாதனுக்கு இப்பொழுது திகைப்பு இன்னும் அதிகரித்தது.

"டாக்டர் சுரேஷ் திருச்சியில் இருக்கிறார் என்று எனக்கு இன்று காலையிலேதான் தெரியும். உங்களை உடனே திருச்சிக்கு அனுப்பி வைக்கும்படி எனக்கு எழுதி யிருக்கிறார்!" என்றார் அவர்.

"உங்களுக்கு சுரேஷைத் தெரியுமா?" என்று கேட்டான் ராமநாதன்.

"நாங்கள் இரண்டு பேரும் சென்னை பச்சையப்பன் கல்லூரியில் ஒன்றாகப் படித்தோம். இன்டர்மீடியட் தேறிய பிறகு அவர் வைத்தியக் கல்லூரியில் சேர்ந்தார். அதன் பிறகும்கூட நாங்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து ஒரு நாடகக் கிளப் நடத்தினோம். எங்கள் சங்கத்தில் டாக்டர் சுரேஷ் தான் ஹீரோ! அடாடா! எப்படி நடிப்பார் தெரியுமோ? நடிகனாகவே பிறந்து வளர்ந்தவன்கூடத் தோற்று விடுவான்!"

"நீங்கள் அவருக்குச் சிநேகிதர் என்று சுரேஷ் என்னிடம் சொல்லவே இல்லையே.



தில்லியில் நீங்கள்தான் மானேஜராக இருக்கிறீர்கள் என்று அவருக்கு ஒரு கடிதத்தில் எழுதி யிருந்தேன். உங்களைத் தெரிந்ததாகவே அவர் ஒரு வார்த்தை பதில் எழுதவில்லையே!"

"ராமநாதன்! சுரேஷ் எப்பொழுதுமே எந்தக் காரியத்தையும் நாடகப் பண்போடு செய்கிறவர். அதுதான் சொன்னேனே, எங்கள் நாடகங்களில் அவர்தான் ஹீரோ என்று! அந்தப் பழக்கம் வீண் போகுமா!"

இப்படிச் சொல்லி விட்டு அவர் சிரித்தார். ராமநாதனுக்கு என்ன பதில் சொல்வது என்று தெரியவில்லை. ஆனால் ராமநாதனுடைய பதிலுக்கு அவர் காத்திருப்பதாகத் தோன்றவில்லை. அவரே தொடர்ந்து பேச ஆரம்பித்தார்.

"அவசியமில்லாமல் சுரேஷ் யாருக்கும் தொந்தரவு கொடுக்க மாட்டார். ஆகையினால் நீங்கள் இன்றைக்கே திருச்சிக்குக் கிளம்பிவிட வேண்டியதுதான். என்ன விஷயமோ தெரியவில்லை! மிக மிக முக்கியமானதாகத் தான் இருக்க வேண்டும்! சந்தேகமில்லை" என்றார் மேலதிகாரி.

தந்தியைக் கையில் வைத்துக் கொண்டு பலத்த யோசனையில் ஈடுபட்டிருந்த ராமநாதனுக்கு அதற்குமேல் யோசனை செய்ய வேண்டிய அவசியம் ஏதும் இல்லை.

"சௌகரியமான பிரயாணம் உங்களுக்கு வாய்க்குமாக!" என்று ஆங்கிலத்திலே வாழ்த்தி விட்டு அந்த அறையிலிருந்து நகர்ந்தார் அதிகாரி.

* * *

சொக்கி குடியில் அன்று பளிஞர்கள் ஒரே பெருங் கூட்டமாகச் சேர்ந்து முருகனைப் பாடிய வண்ணம் குடிசையை நோக்கி வந்தார்கள் அல்லவா? அவர்கள் அனைவரும் இலஞ்சிச் சாமியாரின் ஆசிரமத் திண்ணையிலே உட்கார்ந்திருந்த சொக்கியை நோக்கி நடந்தார்கள். அவளுக்கு முன்பாக வந்து நின்று கொண்டு எல்லாரும் தரையிலே முழுங்கால் படும்படி மண்டி யிட்டு, வலது கையை நிலத்திலே பதித்து அந்தச் சமூகத்தின் சம்ப்ரதாயப்படி தண்டன் சமர்ப்பித்தார்கள். சொக்கி எழுந்து நின்று கொண்டாள். உடனே அந்தப் பளிஞர் கூட்டத்தில் வயது முதிர்ந்தவர்களாகக் காணப்பட்ட ஒரு பளிஞனும், அவனுடைய மனைவியும் கூட்டத்தை விலக்கி விட்டு முன்னணியிலே வந்து நின்றுகொண்டு கைகோர்த்த வண்ணம் பாட ஆரம்பித்தார்கள்:

தும்பிக்கையார் பிள்ளையாரைத்
தொழுதுபாதம் தெண்டனிட்டோம்
ஆனைமுகத்து நாயகனை
அடிபணிந்து தெண்டனிட்டோம்!

தாமரைப் பூ பூத்துநின்ற
தையலவள் வாசலிலே
பூமகளும் நிலமகளும்
பொருந்தும்மண வாசலிலே

ஆனைமுகனார் வந்துநின்று
அசைந்தாடும் வாசலிலே
ஆறுமுக வேலவர்தான்
அவதரித்த வாசலிலே

இவ்வாறு அந்த இருவரும் பாடினார்கள். வார்த்தைகளிலே மலைநாட்டுக் கொச்சை உச்சரிப்பும் வார்த்தைச் சிதைவும் இருந்தன. ஆனாலும் எத்தனையோ பல ஆண்டுகளாக வழி வழியாக வந்த அந்த நாடோடிப் பாடல் இலஞ்சிச் சாமியாரைக் கவர்ந்தது. இந்த நேரத்தில் அணி அணியாகப் பளிஞர்கள் அனைவரும் வரிசைப்படுத்தி நின்று, சொக்கிக்கு முன்னும் பின்னும் கையைத்



# 'அனஸின்'

## நான்கு மருந்துகள் அடங்கியுள்ளது.

'அனஸின்' விஞ்ஞான முறைப்படி சேர்க்கப்பட்ட நான்கு மருந்துகளின் கலப்பாகும். அவை நரம்புகளின் முக்கிய சேர்க்கை பாகங்களில் கூட்டாக வேலை செய்து விரைவில் வலி, தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி, மற்றும் தசை நார்களில் நோவு இவற்றை நீக்கும். அனஸினில் அடங்கிய சில நான்கு மருந்துகள் —

1. கொயினா: ஜுரத்தடுப்பு குணமும், பலவிருத்தி செய்வதற்கும் பிரசித்தி பெற்றது. ஜுரத்தை குறைப்பதில் மிகத் துரிதமானது.
2. காப்பீன்: பலஹீனத்திற்கும், மனச்சோர்வுக்கும் மிதமான தூண்டுகோல் மருந்தாக விதிக்கப்பட்டிருக்கிறது.
3. பினஸிடின்: ஜுரத்தடுப்பு, வலி நிவாரணத் தன்மைகளுக்கு பெயர் பெற்றது.
4. அஸிடைல் ஸாலிஸிலிக் ஆஸிட்: தலைவலி அது போன்ற எல்லா வலிகளையும் போக்குவதற்கு மிகவும் உபயோகமுள்ளது.

அனஸினிலுள்ள இந்த நான்கு மருந்துகளும் ஒரு டாக்டரின் குறிப்புக்கு ஒப்பாகும். 'அனஸின்' இருதயத்திற்கு தீங்கு விளைவிப்பதோ அல்லது வயிற்றுக்கு கோளாறு உண்டாக்குவதோ கிடையாது. வலி, தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி மற்றும் தசைகளில் வலி முதலியவற்றிலிருந்து விரைவிலும், பத்திரமாகவும், நிச்சயமாகவும் நிவாரணம் பெறஎப்பொழுதும் அனஸினையே கேட்டு வாங்குங்கள்.

WILL NOT UPSET THE STOMACH

DOES NOT HARM THE HEART

ANACIN

TRADE MARK REGISTERED

TABLETS

FOR HEADACHE, COLDS, FEVER, TOOTHACHE & MUSCULAR PAIN

DOSAGE
2 TABLETS WITH WATER. REPEAT ONE TABLET IN THREE HOURS IF NEEDED

CONTENTS 2 TABLETS

Manufactured in India by
GEOFFREY MANNERS & COMPANY LIMITED
MAGNET HOUSE, DOUGALL ROAD BOMBAY 1
Trademark Proprietors
WHITEHALL PHARMACAL COMPANY, NEW

2 ANNAS
INDIA

## லக்ஷக்கணக்கான மக்களுக்கு நிவாரணம் அளிக்கின்றது.

A.43



டி.எஸ்.ஆர்
சந்தனாதி & அரைக்கீரை விதைத் தைலங்கள்
கூந்தல் பாதுகாப்பு, குளிர்ச்சி, நறுமணம் இவற்றை அளிக்கிறது
TRADE MARK
டி.எஸ்.ஆர் & கோ, கும்பகோணம்.

தட்டிக் கும்மி யடிப்பது போல் தாளம் போட்டுக்கொண்டு பாட்டைத் தொடர்ந்து பாட ஆரம்பித்தார்கள்:

வேலும் மயிலும்
விளையாடும் வாசலிலே
அன்னம் மிதந்து
அசைந்தேகும் வாசலிலே

வண்மை வளம்உடையாள்
வந்துநிற்கும் வாசலிலே
செல்வம் பெரிதுடையாள்
சேவைதரும் வாசலிலே

இப்படி அவர்கள் பாடியதும், அந்தப் பளிஞர்கள் கூட்டத்தில் இருந்த பெண்கள் மட்டும் தனியாகச் சேர்ந்து ஒரு குதி குதித்து முன்னால் வந்து நின்றார்கள். மறு கணம் தலையை முன்னும் பின்னுமாக வளைத்து அசைத்துக் கும்மி தட்டிக் கொண்டு பளிஞப் பெண்கள் கீழ்க்கண்ட வாறு பாட ஆரம்பித்தார்கள் :

கலியாணம் கலியாணம்
காரிகைக்கே கலியாணம்

அல்லி அரசாணிக்கும்
அர்ச்சுனர்க்கும் கலியாணம்

ஆணழகன் அர்ச்சுனர்க்கும்
பெண்ணழகி அல்லிக்கும்

ஆசார வாசலிலே
அழகுக் கலியாணம்!

இந்த இடத்தில் ஆண்களும் சேர்ந்து பாட ஆரம்பித்தார்கள் :

கலியாணம் என்றுசொல்லிக்
காடெல்லாம் முழுதறிய

உற்றார் உறமுறையார்
ஊரெல்லாம் பாக்குவைத்து

சம்பந்தி மார்களுக்குச்
சந்நிடனே பாக்குவைத்து

வாருங்கள் என்றுசொல்லி
வணங்கி வரவேற்று

முன்னூறு காதம்
மூடியே பந்தலிட்டார்!

ஆயிரம் காதம்
அகலமாய்ப் பந்தலிட்டார்!

எண்ணூறு காதம்பேர்
இடமுள்ள பந்தலிலே

வாழை மரம்கட்டி
வர்ணக் கொடிகட்டி

மாணிக்கப் பந்தலிலே
வரிசையுடன் தான்தூக்கி

தென்னங் குருத்துவெட்டிச்
சோலைக் கிளிகள்கட்டி

தாரும் கமுகுகளும்
தனித்தனியே தொங்கவிட்டார்!

சொக்கட்டான் பந்தலிட்டுச்
சோளக் கதிர்கட்டி

பாளங்கள் தொங்கவிட்டுப்
பந்தல் அலங்கரித்தார்!

இப்படிப் பாடி முடித்ததும், பெண்கள் மறுபடியும் குதித்துக் குதித்து வட்ட மாகக் கும்மியடித்துக் கொண்டே பாடலை முடித்தார்கள் :

கலியாணம் கலியாணம்
காரிகைக்குக் கலியாணம்

அல்லிக்குக் கலியாணம்
அர்ச்சுனர்க்குக் கலியாணம்

அல்லிக்கும் அர்ச்சுனர்க்கும்
அழகான கலியாணம்!

இப்படிப் பாடி முடித்ததும், அவர்கள் ஒவ்வொருவரும் தங்கள் கையிலே கொண்டு வந்திருந்த பூச்செண்டுகளையும், வாழை கமுகுகளையும் ஒரு மலை போலச் சொக்கிக்கு முன்னால் குவித்து விட்டார்கள். குவித்து விட்டு, ஒரு வார்த்தையும் பேசாமல் மறுபக்கம் திரும்பி ஆடிக் குதித்துக் கொண்டே கைகூப்பிய வண்ணம் அங் கிருந்து சென்று விட்டார்கள்.

பாதிரி மரத்தில் பால் வடியும் செய்தி தலைவனுக்குத் தெரிந்து, அவன் தன் சமூ கத்திற்கு அறிவிப்புச் செய்து விட்டான் என்றதும், பளிஞர்கள் வன மோகினியான கன்னியைத் தேடிப் பிடித்து இந்த வித மாகத் தங்கள் முதல் மரியாதையைக் கன் னிக்குச் செலுத்துவது என்று ஒரு வழக் கம் பளிஞர் குடியிருப்பில் இருந்து வந்தது. இது இலஞ்சிச் சாமியாருக்குத் தெரியும்.

"சொக்கி! சொக்கப்பன் அறிவிப்புச் செய்தாச்சு. நீதான் வலது கைப்பெண் என்பது தீர்மானம் ஆகிவிட்டது. ஆனால் இடது கைப் பெண் யாருன்னு தான் நீ சொல்லமாட்டே?" என்றார் சாமியார்.

"மாட்டேன் சாமி! இதுவரையிலும் இல்லாத வெட்கம் இந்த விநாடியிலே யிருந்து எனக்கு வந்துட்டுது, சாமி!" என்று



சொல்லிக்கொண்டே மான் குட்டியைப் போலத் துள்ளி ஓடி விட்டான் சொக்கி!

* * *

அன்றிரவு சொக்கிகுடியில் இலஞ்சிச் சாமியார் தம்முடைய ஆசிரமத்துக்கு வெளியே ஒரு நார்க்கட்டிலை எடுத்துப் போட்டுப் படுத்துக் கொண்டார். குடிசை முகப்பிலே பாயை விரித்து அதில் உட்கார்ந்தான் ரவீந்திரன். கல்யாணி குடிசைச் சுவரின் மாடக் குழியிலே இருந்த அகல் விளக்கை எதிரே கொண்டு வைத்துத் தூண்டி விட்டு நின்று கொண்டிருந்தான்.

"கல்யாணி! எனக்கு மூளைக் கோளாறு வந்தது பற்றி நீ கவலைப் படுவது இருக்கிறதே அது சுத்தப் பைத்தியக்காரத்தனம். உண்மையில் அந்த மூளைக் கோளாறு ஏற்பட்டிராவிட்டால் ஏற்கனவே எனக்கு இருந்த இரத்தவேகம் இப்பொழுது சமனாகி யிருக்காது. தெரிந்ததா?" என்றான் ரவி.

தானாகவே அவன் பேச ஆரம்பிப்பது இதுவரையில் இல்லை. இப்பொழுது இப்படி அவன் பேச ஆரம்பிக்கவே, ஆச்சரியமும் மகிழ்ச்சியும் பொங்கியவளாகக் கல்யாணி தன் கணவனின் வார்த்தைகளையே ஆவலோடு கேட்டவாறு நின்றான்.

"கல்யாணி! டாக்டர் சுரேஷும் இலஞ்சிச் சாமியாரும் சர்ப்பகந்தியிலிருந்து செய்யப்பட்ட ஒரு மருந்தை எனக்குக் கொடுத்திருக்கிறார்கள். இதில் ஒரு பெரிய ஆச்சரியம் என்னவென்றால், எனக்கு மூளைக் கோளாறு ஏற்பட்ட விதமும், அதன் பிறகு நடந்த சம்பவங்களும் எல்லாம் அப்படியே இப்பொழுதும் நினைவு இருக்கின்றன! சந்திரிகா காணாமற் போனது, அவன் எழுதியிருந்த கடிதத்தை நான் பார்த்தது, உடனே நீ மாடிக்கு வந்து இரைச்சல் போட்டது, நான் பட பட என்று படிகளிலே இறங்கியது, பிறகு நடந்த விபரீதம் — எல்லாமே திரைப்படம் மாதிரி என்னுடைய உள்ளத்தில் இப்பொழுது நினைத்தாலும் அப்படி அப்படியே தெளிவாக ஓடுகின்றன. இத்தனை அதிர்ச்சிக்கும் காரணம் என்ன என்று டாக்டர் சுரேஷ் தமது மூளையைக் குழப்பிக் கொண்டார் அல்லவா? அந்தக் காரணமும் எனக்கு இப்பொழுதுதான் தெரிகிறது. ஒரு பெரிய வியப்பு என்ன தெரியுமோ? டாக்டர் சுரேஷ் கண்டெடுத்துப் படித்த கடிதம் வேறு, நான் என் கையிலே வைத்துப் பார்த்துக் கொண்டிருந்த கடிதம் வேறு. நான் பார்த்த கடிதத்தை டாக்டர் பார்த்ததில்லை. டாக்டர் பார்த்த கடிதத்தை நான் பார்த்ததில்லை. ஆனால் இரண்டு கடிதங்களுமே சந்திரிகாவின் கடிதங்கள்தான் — பார்த்தாயா நான் பாட்டுக்குப் பேசிக் கொண்டே போகிறேனே. நீ நின்று கொண்டே இருக்கிறாயே. கால் கடுக்கும் அம்மா. புருஷனுக்கு முன்னால் மனைவி உட்காரக்கூடாது என்பதெல்லாம் அந்தக் காலம். என்னிடம் கேட்டால், மனைவிக்கு முன்னால் புருஷன் உட்காரக் கூடாது என்றுதான் சொல்லுவேன். ஏன் தெரியுமா? இந்தக் காலத்து மனைவிமார்கள் புருஷனை அங்கே இங்கே என்று வேலை கொடுத்துத் துரத்திக் கொண்டே யிருக்கிறார்கள். புருஷர்கள் கொஞ்சம் நிம்மதியாக உட்காருவது அவர்களுக்குப் பிடிப்பதில்லை. முகத்தை ஏன் சுளிக்கிறாய்? உன்னையா அப்படிச் சொன்னேன். இல்லை. காட்டுக்குள்ளே சம்பிரதாய மரியாதையெல்லாம் என்னத்துக்கு என்றேன்! சும்மா உட்கார்!"

இவ்வாறு பேச ஆரம்பித்தான் ரவி. அவனுடைய வார்த்தைகளில் வசமாகி நின்றான் கல்யாணி.

(தொடரும்)

Printed & Published by T. Sadasivam at the "Kalki" Press, No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras - 10. Editor : Mi. Pa. Somasundaram

